Registered No. M. 1500. "NAVASAKTI"

# நவசக்தி


| சந்தா விவரம் | ரூ. அ. |
|---|---|
| வருட சந்தா ... | 5 0 |
| ஆறுமாத சந்தா ... | 3 0 |
| வெளிநாடு-வருடசந்தா | 6 0 |

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

விளம்பர விகிதம்
பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா 7 0
சில்லரை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரம் செய்யப்படமாட்டாது.

சிலம்பு கo சுக்கிலஹு மார்கழிமீ" ௩௨ (18—12—29) புதன்கிழமை பரல் ௯


## "நவசக்தி" கிடைக்கும் இடங்கள்

**சிங்கப்பூர்**

1. K. S. A. S. பிரதர்ஸ், 176, சிலிகி ரோடு.
2. G. R. கணேசர் & கம்பெனி, 10—1, சிசில் தெரு.
3. தி. பிரிட்டிஷ் & அமெரிக்கன் நியூஸ் கம்பெனி, 6, பாட்டரி ரோடு.
4. பெடரல் ரப்பர் ஸ்டாம்பு கம்பெனி.

**கோலாலம்பூர்**

1. பெடரல் ரப்பர் ஸ்டாம்பு கம்பெனி.
2. விஸ்வநாத புக் டிபோ, 9, பிரிக் பீல்டு ரோட்.

**ஈப்போ**

1. பெடரல் ரப்பர் ஸ்டாம்பு கம்பெனி.
2. தி. சவுத் இண்டியன் டிரேடிங் கம்பெனி, No. 50, கன்னலே ரோடு.

**பினங்கு**

இண்டோ மலாயன் ஸ்டோர், 19, சைனுத் தெரு.

**கொழும்பு**

S. சண்முகம் பிள்ளை நெ. 4, கைமான்ஸ் கேட்.

**ரயில்வே ஸ்டேஷன் புத்தகசாலை**

1. டைபிங்
2. டாபா ரோடு
3. மலாக்கா
4. கில்லாங்
5. சிரம்பான்

**யாழ்ப்பாணம்**

M. S சுப்பிரமணியம் அண்டு பிரதர்ஸ், 'இலக்குமி வாசம்' வண்ணார் பண்ணை.

## நம்பியாண்டார் நம்பி

அவநெறிக்கே விழப்புக் கவிழ்ந்தா னமுழ்ந்தாமை வாங்கித்
தவநெறிக்கே யிட்ட தத்துவனே யத்தவப் பயனுஞ்
சிவநெறிக்கே யென்னை யுய்ப்பவனே
[சென்னந் தொறுஞ்செய்
பவமறுத் தாள்வதற்கோ தில்லை நட்டம் பயில்கின்றதே.

பிறவியிற்பெற்ற பயனென்று கண்டிலம் பேரொலிநீர்
நறவியல் பூம்பொழிற் றில்லையுணு டகமாடுகின்ற
துறவியல் சோதியைச் சுந்தரக்கூத்தனைத் தொண்டர்
[தொண்ட
ருறவியல் வாற்கண்கள் கண்டுகண் டின்பத்தை
[யுண்டிடவே.

நல்வழிநின்றார் பகைநன்று நோய்பருறவி லென்னுஞ்
சொல்வழிகண்ட னம்பாந்தொரு சீர்த்தில்லை யம்பலத்து
வில்வழிதானவரு ரெரித்தோன் வியன் சாக்கியனார்
கல்வழிநேர்நின் றளித்தனன் காண்க சிவகதியே.

கூடுவ தம்பலக்கூத்த னடியார் குழுவுதொறுந்
தேடுவதாங்கவ ணுக்கமச் செவ்வழி யவ்வழியே
யோடுவ துள்ளத் திருத்துவதொண் சுடரைப்பிறவி
வீடுவதாக நினையவல் லோர்செய்யும் வித்தகமே.

ஒவ்வொரு குடும்பத்திற்கும் இன்றியமையாத பொக்கிஷம்

# மின்சார ரசமேயாகும்

சில டாக்டர்களின் அபிப்பிராயம்

டாக்டர் ஏ. ஜே. சுப்பராய முதலியார், L. M. P., வேலூர்

* * அடிக்கடி நேரும் தலைவலி மந்தம் அஜீரணம் வயிற்றுப்போக்கு முதலியவைகளையும் வாய்வு வாத வலிகளையும் மூக்கு தொண்டை சுவாசாசயம் முதலிய உறுப்பின் சதைப் பற்றுகளையும் நரம்பு சம்பந்தப் பட்ட ஒற்றைத் தலைவலி முதலிய நோய்களையும் மின்சார ரசம் நிச்சயமாக நிவர்த்திக்கிறது.

ஃ ஃ ஃ

டாக்டர் எம். அப்பாய் ராஜூ, வைத்தியசாலை, மதகுபட்டி

* * மின்சார ரச மருந்தானது உயர்ந்த டாக்டர்களால் உபயோகப்படுத்தும் படியான சிறந்த ஔஷதங்களைக் கொண்டு தயாரிக்கப்பட்டிருக்கிறது. கை தேர்ந்த டாக்டர்கள் கிடைக்காமல் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருக்கும் தூர தேசத்தில் வசிக்கும் ஜனங்களுக்கு இது ஒரு பெரிய வரப்பிரசாதம் என்றே சொல்ல வேண்டும்.

ஃ ஃ ஃ

டி. கோபால்சாமி நாயுடு, L.M.P. பென்ஷன் சப் அசிஸ்டெண்டு சர்ஜன், உடுமலைப்பேட்டை.

பல ரோகங்களால் பீடிக்கப்பட்ட அநேக வியாதியஸ்தர்களுக்கு மின்சார ரசத்தைக் கொண்டு சிகிச்சை செய்ததில் 100-க்கு 87 வியாதியஸ்தர்களுக்கு நல்ல குணத்தைக் கொடுத்திருக்கிறது. மற்ற வைத்தியர்களால் கைவிடப்பட்ட அநேகருக்கு மின்சார ரசத்தால் நல்ல சௌக்கியம் ஏற்பட்டிருக்கிறது. இந்த மருந்தினால் கொஞ்சமாவது குணம் ஏற்படாத கேசே கிடையாது.

ஃ ஃ ஃ

ஆர். வி. நாயுடு, ரெயில்வே மெடிகல் ஆபீசர், டாங்கோ, (பர்மா.)

எனது குழந்தையின் அஜீர்ண பேதி ரோகத்தை மின்சார ரசம் குணமாக்கியதற்கு வந்தனம். தாங்கள் அதனைக் காப்பாற்றி விட்டீர்கள்

புட்டி 1-க்கு ரூ. 2. தபால் சார்ஜ் வேறு. கேட்லாக் இனாம்.

விலாசம் :—மின்சார ரசம் கம்பெனி லிமிடெட், சேலம்.

---

## படக்காட்சி!

ரூ. 20 ஆகயிருந்தது ரூ. 5-8-0 தான்

அமெரிக்கன்

சிறிய சினிமா மெஷின்

(எலெக்டிரிக் விளக்கு, பாட்டரியுடன்)

வெகு நூதனமான இந்த மெஷினினால் பொதுப் படக்காட்சிச் சாலையில் அனுபவிக்கும் ஆனந்தத்தை உங்கள் வீட்டிலேயே அடையலாம்,



நர்த்தன மாடுவது, தீரச் செயல்கள், மோட்டார், ரயில், ஏரோப்ளேன் விபத்துகள், பாரிஸ் மார்ச் ..., மலைகள், ஆறுகள் முதலிய காட்சிகள் ஓடுவதும் அசைவதும் மிகத் தெளிவாகத் தெரியும். பிலிம் டேப் ஒரு கஜம்கூட அனுப்பப்படும். உபயோகிக்கும் முறையும் மெஷினுடன் உண்டு.

| | | | |
|---|---|---|---|
| மெஷின் குறைந்த (அசல்) விலை | ரூ. | 5 | 8 |
| தனி பிலிம்டேப் 1 கஜம் | ,, | 0 | 6 |
| ,, 3 கஜங்கள் | ,, | 1 | 0 |

முந்துங்கள்!

லக்ஷ்மி ட்ரேட்ஸ் கம்பெனி,
173, தங்கசாலை வீதி, சென்னை.

---

இனாம்! கேட்லாக் இனாம்!!

சங்கீத வித்வத்ரத்னங்கள் பாடும்

HINDU MUSIC SONGS (320) 1-8-0.

352 நூதன விடி கதைகள் புத்தகம் 4 அணா ஸ்டாம்ப் அனுப்புவோர்க்கு இனாம். சுயமரியாதைக் கீர்த்தனத் திரட்டு அணா 8.

இவ்விரண்டையும் ஏககாலத்தில் வாங்கினால் தபாற்கூலி இனாம்.

S. B. சுந்தரம் கம்பெனி,
3, பார்க் டவுன் (P.O.) (ந) மதராஸ்.

---

## வெள்ளி பஸ்பம்

வெள்ளை, வெட்டை, மூலங்கள், எலும்புருக்கி, நீரிழிவு, ஷை சம்பந்த குன்மம் பெரும்பாடு எல்லாம் தீரும். தளர்ந்த தாது வலுக்கும். மற்ற நோய்களுக்கும் மருந்துண்டு. வியாதியின் விபரம் எழுதினால் தக்க பரிகாரம் மருந்துடன் தெரிவிக்கப்பெறும். 5 நாளில் நிச்சயம் குணம் தெரியும். 40 நாள் மருந்து ரூ. 5.

விலாசம் :—

சே. விசுவநாத செட்டியார்,
வைத்யம், லாலுகுடி, திருச்சி ஜில்லா.

---

## திருப்பூர் பனியன்கள்

முதல்தரம் கார்டிகன். 32 இஞ்சு. டஜன் 1-க்கு 6-8-0. வேண்டியவர்கள் உடனே ஆர்டர் செய்யவும்.

**The General Knitting Factory,**
*Tirupur.*

---

# பெண்ணின் பெருமை

அல்லது

## வாழ்க்கைத் துணை

[இரண்டாம் பதிப்பு]

திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தர முதலியார் இயற்றியது

இந்நூல், பெண்மை தாய்மை இறைமை என்னும் முப்பொருளை முதலாக உடையது. இம்மூன்றும் முறையே நூலின் உடல் உள்ளம் உயிராக அமைந்திருக்கின்றன. இம்மூன்று முதலினின்றும் கிளம்பிய கவடுகளும் கோடுகளும் நூலின் பிற உறுப்புக்களென்க.

பெண் பிறவியின் விழுமிய நோக்கம், அன்பால் ஒருவனை மணந்து ஒழுங்குபட்ட இல்லறம் நடாத்துவதில் நிறைவேறுமென்பது நூலின் திரண்ட பொருள். இயற்கை வாழ்வினின்றும் வழுவிச் செயற்கைப்பாழில் வீழுவதால் விளையுங் கேடுகள் இந்நூற்கண் விளக்கமாக ஓதப்பட்டிருக்கின்றன. அறம் அன்பு அருள் முதலியவற்றிற்குப் பெண் உறையுள் என்பது இந்நூலில் தெளிவாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. ஒருத்தி ஒருவனுடனும் ஒருவன் ஒருத்தியுடனும் வாழும் உயரிய ஒழுக்க மணம் இந்நூலில் யாண்டுங் கமழ்ந்து கொண்டிருக்கும்.

இயற்கை வாழ்வு, செயற்கைத் தாழ்வு, உடலோம்பல், மலச்சிக்கல், கூடா வொழுக்கத்தால் விளையுங் கேடுகள் போன்ற பொருள்கள் நூலின் ஊடே ஊடே சில விடங்களில் பெய்யப்பட்டிருக்கின்றன. எல்லார்க்கும் பயன்படுமுறையில் நூல் எளிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. விலை ரூபா 2.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

---

கும்பகோணம் தென் இந்தியா கன்பெக்ஷனரி பாக்டரியில் தயாரிக்கப்படும்

## பெப்பர்மெண்டையே உபயோகியுங்கள்

## ஏன்?

ஏன் எனில் இந்திய மூலதனத்தைக்கொண்டு இந்தியர்களால் நடத்தப்படும் தொழிற்சாலை இதுவே. வெகு நேர்த்தியானவை என்று புகழப்பெற்றது. விலை வெகு நயம். ஒரு முறை தருவித்துப்பாருங்கள். உண்மை விளங்கும். விலை விபரத்திற்கு உடனே எழுதுங்கள்.

THE SOUTHERN INDIA CONFECTIONERY FACTORY,
Kumbakonam,

---

பொடியிற் சிறந்தது ராஜன் பட்டணம் பொடி

## ஆர். எஸ். சுகந்த மூக்குத்தூள்

விலை விவரங்களுக்கும் மற்றும் எங்களிடம் தயாராகும் தினுசுகளுக்கும் எழுதவும்.

பி. வி. ராஜன் & கம்பெனி,
நெ. 44, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, ஜ. மதராஸ்.

தந்தி விலாசம் :— "நஸ்யம்."

---

முருகன்

# திருவருட்பா

வடலூர் - இராமலிங்க சுவாமிகள் அருளிச் செய்தது; திருவருட்பாவில் ஐந்தாந் திருமுறையாகத் திகழ்வது. இராமலிங்க சுவாமிகள் திருவருட்பேறு குறித்துத் திருத்தணிகையில் முருகப்பெருமான் முன்னிலையில் "அழுத அழுகை" இந்நூலில் தேங்கி வழிகிறது. "முருகன் திருவருட்பா" கருங்கல் மனதையுங் கரைத்துக் கரைத்து இளகச் செய்யும்; திருவருட்பேற்றில் காதல் எழுப்பும். அதை ஒருகால் ஓதுவோரும் அன்பராதல் ஒருதலை. விலை அணா 8.

---

தமிழ்ப்போசிரியர்

மாகறல்-கார்த்திகேய முதலியார் அவர்கள்

இயற்றிய

# மொழி நூல்

**(PHILOLOGY)**

இந்நூல் பண்டைத் தமிழ் நூலாராய்ச்சி செய்வோருக்கும், சரித்திர ஆராய்ச்சிக்காரருக்கும் பெரும்பயன் தருவது. இந்நூற் பொருள் விளக்கம் :—(க) காதமென்பதளவு, (உ) கணன விதி, (ந) தொல்காப்பியர் காலம், (ச) ஒலியும் எழுத்துமொன்றுபடல், (ரு) இயலொலி, (சு) சொற்றொடரழகு, (எ) தமிழின் பழமை (அ) தமிழாசிரியர்கள், (கூ) செந்தமிழ், (க0) தமிழ்வேறு திராவிடம் வேறு, (கக) மலையாளத்தின் தோற்றம், (கஉ) பாஷைகளின் வளர்ச்சி, (கந) மணிப்பிரவாளம், (கச) பாளி, (கரு) தமிழ் வேதாகமங்கள், (கசு) இசைக்கல்வி, (கஎ) குறிஞ்சியின் பெருமை, (கஅ) முதற்படைப்பு, (ககூ) கைக்குறி முதலியன, (உ0) சூரியன் கோள்களுக்கு நடுவினன், (உக) மக்கட்கூட்டம் ஒன்று, (உஉ) பழந்தமிழ்க்காலம் (உந) தமிழ்க்காரணம், (உச) ...வணிப்பு.

விலை ரூ. 2.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

---

## கிறிஸ்துமஸ் பண்டிகைக்காக

இனாம்! இனாம்!! இனாம்!!

31-12-29 வரையில்தான்



இங்கிலாந்தில் செய்தது மாக்ஷிமை தங்கிய ஜார்ஜ் மன்னரால் புகழப்பெற்றுப் பிரக்யாதியடைந்த ரிஜிஸ்டர்டு பவுண்டன் பேனா, தங்க பிளேட் நிப்புபோட்டது. இதை வாங்குபவர்களுக்கு மூன்று வருஷம் உத்தரவாதமுள்ள பாக்கெட் லீவர் வாட்சு இனாம். இரண்டு பேனாக்கள் வாங்கினால் இரண்டு பாக்கெட் வாட்சுகளாவது அல்லது ஒரு ரோல்டு கோல்டு ரிஸ்டுவாட்சாவது இனாம். உடனே எழுதுங்கள். ஒரு பௌண்டன் பேனாவின் விலை ரூபா 2-15-0.

விலாசம் :— தி. கிருஷ்ணா ஏஜன்ஸி,
தபால் பெட்டி 119, மதராஸ்.

---

**MAGICAL PILES BALM**

## மூலவியாதிக்கு அரிய ஔஷதம்

எங்களுடைய ரிஜிஸ்தர் செய்யப்பட்ட சிங்க மார்க்குள்ள மூலவியாதி நிவாரண மருந்து, எப்படிப்பட்ட கொடிய மூலவியாதியையும் நிறுத்தும். 24-மணி நேரத்தில் நோயும் இரத்தமும் நின்று விடுகின்றன. பத்து நாட்களில் பூரா குணம். டின் விலை ரூபா 2-8-0. செல்வாக்குள்ள பதினாயிரம் ஏஜண்டுகள் தேவை.

பைல்ஸ் பாம் டேபோ,
விசாகப்பட்டணம், தென் இந்தியா.

வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு ௩ | சுக்கிலஸு மார்கழிமீ ௪உ (18—12—29) புதன்கிழமை | பரல் ௬

## இராஜ யோகம்

(ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்)

ஹடயோகத்தினும் இராஜ யோகம் ஒரு படி உயர்வு. இந்த இராஜயோகம் உடலுயிரைப் பொறுத்ததில்லை. இதன் நடுக்களம் மனம் என்று மொழிந்தோம். மனதை யடக்கி, அதன்துணை பற்றி மனிதனைப் புதுப்பித்துக் கடவுட் பொருளில் (பகவத் ஸத்து) நிலைப்பிக்க அது விரும்புகிறது. அது மனதை சுத்தம், அடக்கம், அமைதியாக்குகிறது. மனவரசில், எல்லா எண்ணம், ஊகம், மணம், தீர்மானங்களையும் அடக்கமுயலுகிறது. மனதின் அற்புத விளையாட்டும், பன்முகச் செயல்களும் பிறப்பது சித்தத்தில். நாம் எது செய்தாலும், ஊகித்தாலும், கண்ணுற்றாலும், அதெல்லாம் சித்தக்கடலினின் றெழுந்து, அதிலேயே அடங்குகின்றன; அதனிடையே சங்கல்ப வடிவாய் அமர்ந்துள்ளன. மனதின் அடிப்படையும் மூலமுமான சித்தமே இராஜயோகியின் குறிப்பு. சித்தத்தை ஏகாக்ரமாக வசப்படுத்தினால், பிறகு மனம் தானாகவே வசமாகி விடும். அதனாலே தான் பதஞ்சலியோக சூத்திரத்தில்,

"யோகச் சித்தவ்ருத்தி நிரோதய:"

என்றார். சித்த விருத்தியை யடக்குவதே யோகம். மனிதனின் சித்தம், எப்போதும் நூறு வழிகளில் சலிக்குந் தன்மையது. செயல் வேகத்துடன் வீறிட்டெழுந்து மனிதனுக் குள்ளே அழுக்குற்று இங்குமங்கும் சிதறியிருக்கிறது. அதனால் மனிதன் தன்னை அறிய முடிவதில்லை. அதனால்தான் அவன் மகத்துவ சத்தான பகவான், பரம புருஷனின் பரிசத்தை அடைய முடிவதில்லை. சேவகன் எஜமானனை விரட்டிப் பிரபு பீடத்தை அலங்கரித்து அரசாளும் விதமாக, இந்தச் சித்த விருத்தி பகவானின் உரிமையைக் கவர்ந்து அதிகாரஞ் செய்கிறது. ஆதலால் இந்தச் சித்த விருத்திகளை வளைத்து, வணக்கிச் சாந்தப்படுத்தவே இராஜயோகி முயலுகிறான். இதற்கே அவன் அஷ்டாங்க யோகத்தை மேற்கொள்ளுகிறான்.

* * *

இந்த அஷ்டாங்கமாவது :— யம, நியம, ஆஸன, பிராணாயாம, பிரத்யாகார, தாரண, தியான, சமாதியே. முதலில் யமமும், நியமமும் சஞ்சலமுடைய மனம், சித்தங்களின் அடங்காத முரட்டு வேகத்தின் அளவைக் குறைக்கின்றன. இன்னா செய்யாமை, உண்மை, அடக்கம், தூய்மை, களிப்பு, கடவுள் நினைப்பு முதலிய விதிகளிடையே பழகி சாதகன் சித்தசலனத்திற்கு அடிமையாகாது விடுபடுகிறான். மனதை யடக்கி ஒழுங்குபடுத்திப் படிப்படியாக, நிலையான சாந்தத்திற்குப் பயிற்றுகிறான். ஆனால் மனதைச் சாந்தப்படுத்த, மனதால் மட்டும் முடியாது. உடலும் உயிரும் மனதின் மீது ஆதிக்கஞ் செலுத்துகின்றன. அதனால் தான் ராஜ யோகமும் ஆஸன ப்ராணாயாமங்களை (வளிநிலை) வற்புறுத்துகிறது. ஹடயோகி மிகவும் கடினமான, நூற்றுக்கு மேற்பட்ட ஆஸனங்கள், பலவகையான, பின்னலான பிராணாயாமங்களின் உதவியை மேற்கொண்டுள்ளான். ஆனால் இராஜ யோகியோ, அனைவருக்கும், எளிதாக எம்மட்டும் பயன்படுமோ அம்மட்டுமே அவற்றை மேற்கொள்ளுகிறான். உறுதியாயும், சுகமாயும், இருக்கக் கூடியது ஓரே ஆஸனம் (இருப்பு). எவ்விருப்பில் இருந்தால் மனம் நிலைக்கப் பயன்படுமோ, பிராணாயாமம் சகஜமாக நடக்கிறதோ அதுவே ஆஸனம். உயிர்ப்பு, விடுப்பு வழியை (உஸ்வாஸ நிஸ்வாஸ கதி) அடக்குவதே பிராணாயாமம். இதைத் தடுப்பதில் இரண்டு நோக்கங்களுள்ளன. முதலில் உயிர்ப்பைத் தடுப்பதால் சித்த விருத்தியைத் தடுப்பது எளிதாகிறது. இரண்டாவது, உயிர்ப்பின் ஆட்டத்தைத் தன் வயப்படுத்திப் பிராண சக்தியைத் தன்னுள் அடக்கி ஆளுவதே. இதனால் பிராண சக்தியின் ஆதாரமான துயிலும் குண்டலி (ஸுப்த குண்டலி) விழித்து, சித்தத்தில் கனமாகப் படிந்து, உறைந்துள்ள தமத்தையும், ஆவரணத்தையும், தூர விலக்குகிறது. சித்தம் அதனால் தெளிவாகவும், சத்வப் பிரகாஸமாகவும் ஆகிறது. சித்தத்தை, ஸத்வப் பிரகாஸப்படுத்தி உயர்த்துவதே ஆஸன, பிராணாயாமங்களின் ஒரே நோக்கம். இந்த நோக்கமுள்ள சாதனமான ஆஸன, பிராணாயாமங்களில் அதிக மானதையும் வேண்டாததையும் இராஜயோகம் விலக்கி விட்டது. மேலும், பிராணாயாமத்தின் மூலம் அடையும் எல்லா சித்திகளிலும் அற்புத சக்திகளிலும் அடயோகியைப் போல இராஜயோகி அவ்வளவு பற்றுவது தொடர்பாவது வைப்பதில்லை.

* * *

சித்தம், சுத்த சாந்தக்களிப்பு நிறைந்ததும், முழுதும் சிந்தையற்று நிச்சலமாகிறது. பிராணாயாமத்தின் பிறகு, விஷயங்களில் திரியும் விருத்திகளை, பிரத்யா காரஞ் செய்து (உள்ளிழுத்து) ஓர் அனுபவம், காட்சி, அல்லது ஞானத்தில், படிப்படியாய் தன்மயப்பட்டு நிலைக்கவேண்டும். இதன் பின் முறையாய், பிரத்யாகாரம், தாரணை, தியானங்களின் மூலம், முடிவில்.

"ததே வார்த்த மாத்ர
நிர்வ ஸம ஸ்வ ரூப ஸூன்யம்"

என்பது போன்ற சமாதியிலிருப்பதே இராஜ யோக சித்தி. இச்சமாதி யவஸ்தையில் வெளியும, உள்ளும், எல்லாம், செயலற்றுச் சாந்தமாகிறது. இதுவே இராஜயோகத்தின் முற்ற முடிவு. இங்கே நீ, நான், தியானம், தேயம் என்பது சிறிது மில்லை. எல்லையற்ற, பெரும்பொருள் உணர்வே அங்குள்ளது. இந்த சமாதி அவஸ்தை மிகப் பூரண சித்திபெற்றதும், சித்த சம்ஸ்காரங்கள் சாந்த மாகி, ஓரேயடியாய் எல்லாம் வேர் பெயர்ந்து ஒழிந்து,

"தேய பீஜ க்ஷயே கைவல்யம்"

என்ற கேவல சமாதி சித்திக்கிறது.

* * *

இராஜ யோகத்தில் இரு நோக்குள்ளன. சாதாரணமாய் இந்திரிய வசமான தூலத்தின் நடுவுள்ள நாம், அதீந்திரிய வுலகைப்பற்றி யொன்றும் அறிய முடிவதில்லை. இந்திரியத்தின் ஆட்டத்தை யொடுக்கி, மனதை அமைதியாகவும், சித்தசூன்யமாகவும் ஆக்கினால்நம்மிடம் ஒரு சைதன்யம் விழித் தெழுகிறது. இந்திரியத்தா லடையும் காட்சியில் மட்டும் நமதறிவு கட்டுப்பட் டிருக்கவில்லை. அதனினும் புதிதாய், ஆழமாயுள்ள ஞான ஊற்று பொங்குகிறது. அந்த சத்துவமே மிக்க பயனுள்ள அறிவு. பொருளின் உட்கிடக்கை, தனக்குக் காட்சியாகிற போது, ஜீவன் நமது அத்யாத்ம ஸ்வரூபத்தில் நிலைக்கிறது. இதன் பெயரே ஸ்வராஜ்ய சித்தி.

இரண்டாவது கேவலம் உள்ளுலகை யாளுவது மட்டுமல்ல; கேவலம் ஆத்ம சைதன்யத்தில் மூழ்கிக்கிடப்பது மட்டுமல்ல. சமாதி யவஸ்தையின் களனை விரிந்த சிற்சக்தி மூலம் நாமிருக்கும் உலகையும் நம் வசமாக்க முடியும். அதன் மூலமே நமது கர்ம ஜீவன், சுற்றங்களை அடக்கி, ஆக்கி, ஆண்டுநடத்த முடியும். இதற்கே சாம்ப்ராஜ்ய சித்தி என்று பெயர். இந்நாளில் இந்த சாம்ப்ராஜ்ய சித்தியின் பேச்சை இராஜயோகி விலையாக மதிப்பதில்லை. இதை இராஜயோகி தன் சதனத்தி னின்று முற்றும் விலக்கிவிட்டான். ஆனால் முற்கால யோகிகள் ஸாம்ப்ராஜ்ய சித்தியின்றி ஸ்வராஜ்ய சித்தியை ஒரு பொருட்டாக மதித்ததில்லை.

* * *

உடலுயிர்க்கு மேலுயர்ந்து இராஜ யோகம் மனிதனைப் பூரணப் படுத்தி, அவனை மனோமய கோசத்தினிடையுறுத்தி, அவனுடைய உண்மையான அத்யாத்ம ஜீவனத்தின் உருசியைக் காட்டுகிறது. இது தான் அதன் நன்கொடை. ஆனால் கேவலம் சமாதி அவஸ்தையிலேயே மிதமிஞ்சி நிலைத்திருப்பது இராஜயோகத்தின் குறை. நாம் விரும்புவது, அதீந்திரியமான சேதனத்தைத் தூலத்திலும் விழிப்பித்து, ஆத்மசக்தியால் உலகையே ஆக்குவது. இராஜயோகியோ, தூல வுடலுடன் பந்தத்தை யறுத்துக் கொண்டு, பிராண, மனதின் எல்லா வித ஆடல்களையும் அடக்கி, ஏதோவொரு துரீய லோகத்தில் சஞ்சரிக்க விரும்புகிறான். விழிப்பு நிலையை வெறுக்கத் தக்கதாக மதித்து, மறந்து தன்னுள் ஸ்வப்ன சுழுத்தி மத்தியில் மூடிக் கிடக்கிறான்.

வென்று விரித்து
விளங்கிடு சக்தியை
யொன்றி யுணர்ந்து
மென்றுன்னு மினோ
வொரு பொருளெல்லாமென்
றெண்ணுமினோ.

---

இங்கிலாந்தில் டார்லிங்டனுக்கு அருகாமையில் நீஷாம் என்ற இடத்தில் மிஸ் எலிஜபெத், மிஸ் டோரோதி ஆல்டர்ஸன் என்ற இரட்டைச் சகோதரிகள் இருக்கிறார்களாம். இவர்களிருவர்க்கும் ஆச்சரியமான ஓவிய சக்தி வாய்ந்திருக்கிறது. இவர்கள் ஓவியக் கலையை எங்கும் சென்று கற்கவில்லை. இவ்விருவரும் மேஜையின் இருபக்கங்களிலும் உட்கார்ந்துகொண்டு தலைகீழாகச் சித்திரங்கள் வரைகிறார்களாம். இவர்கள், தாங்கள் என்ன சித்திரத்தை எழுதப்போகிறோமென்பதை முன்னர் ஒருவர்க் கொருவர் தெரிவித்துக் கொள்ளாமலே வேலையைத் தொடங்குகிறார்களாம். ஆயினும் இருவருடைய எண்ணங்களும் ஒன்றாகவே இருக்கின்றனவாம்.

## அமானுல்லாகான் ஏழையா?

### கோடீசுவரர் என்று சொல்லப்படுகிறது

ஆப்கானிஸ்தானத்து மாஜி அமீர் அமானுல்லாகான், ஏழை யென்று முன்னர்க் கூறப்பட்ட போதிலும் இப்பொழுது அவர் பெரிய கோடீசுவரர் என்று விளங்குகிறது. இப்பொழுது, அவர், ஐரோப்பா கண்டத்திலுள்ள முக்கியமான தலை நகரங்களில் சுற்றுப் பிரயாணஞ் செய்து, தாம் முன்னர், விஜயஞ் செய்திருந்தபோது, செய்து கொண்ட வியாபாரப் பழக்கத்தை மீண்டும் ஊர்ஜிதஞ் செய்து கொண்டு வருகிறார் என்று சொல்லப்படுகிறது. அமானுல்லாவும் அவர் பரிவாரமும் சான் ரிமோவில், ஒரு பெரிய மாளிகையை ஏற்படுத்திக் கொள்ளும் போது, இத்தாலிய பாங்கொன்றில் 10000000 லீர் (நாணயம்) டெபாசிட் கட்ட வேண்டியிருந்தது. அமீர் என்ற தோரணையில் அமானுல்லாகான் ஐரோப்பா கண்டத்தில் சுற்றுப்பிரயாணஞ் செய்த போது செளரியா ராணியின் 12000000 (டாலர்) பெறுமான நகைகளையும் 25000000 டாலர் பெறுமான தங்கச் சவரன்களையும் கொண்டு வந்தார். திரும்பிச் சென்ற போது, மேற்படி நகைகளை பர்லினிலுள்ள ஒருபாங்கிலும், தங்கச்சவரன்களை வேறு ஆறு நகரங்களிலுள்ள பாங்கிகளில் போட்டுவைத்தும் வந்தார். அமானுல்லாகான், அரசாங்க விருந்தினராகப் பிரஸ்ஸல்சில் தங்கியிருந்தபோது, ஆப்கானிஸ்தானத்தில் குழப்பம் ஏற்பட்டிருக்கும் செய்தி தெரிந்தது. அதுமுதல் அமானுல்லாகான், தமது பணத்தைப் பத்திரப்படுத்தி வைப்பதில் ஜாக்கிரதையாயிருந்தார். ஜர்மனியிலிருந்து ருஷ்யாவுக்குச் சென்ற போது, செளரியா ராணியின் 12000000 டாலர் பெறுமான நகைகளை பர்லின் பாங்கி ஒன்றில் டெபாசிட் செய்து வந்தார். இந்த நகைகள், லண்டன், பாரிஸ், கெய்ரோ முதலிய நகரங்களில் நடைபெற்ற இராஜாங்க விருந்துகளில் பெரிதும் பாராட்டப்பட்டன. மாஸ்கோவில்கூட, தமது பணத்தையோ நகைகளையோ வைத்துச் செல்லுதல் பத்திரமல்ல வென்று அமானுல்லாகான் கருதினர். அமானுல்லாகான் தம்பதிகளுக்கு சிம்மாதனம் இழந்து போன துக்கம் இருந்த போதிலும், தங்களால், ஐரோப்பியத் தலை நகரங்களில் போடப்பட்டபணம் அரைவட்டி விகிதம் விருத்தியடைந்து வருகிறதென்ற ஆறுதல் இருந்தது. ஆப்கானிஸ்தானத்திலிருந்து, முடியிழந்து திரும்பிவந்த போது, 20,000000 டாலரை அமானுல்லாகான் கொண்டுவந்தார். தமது சகோதரர் இனுயதுல்லாகானுக்கு 30,00000 டாலர் [illegible] வைத்துவிட்டுச் சென்றார். ஐரோப்பா கண்டத்தில் பெரிய பணக்காரரும், அரசர்களைச் சிம்மாதனங்களினின்று ஏற்றுவதிலும் இறக்குவதிலும் வல்லவர் என்று பெயர் படைத்தவருமான ஸர் பேசில் ஜாஹராப் என்பாருக்குச் சொந்தமான இத்தலியிலுள்ள மாளிகையிலேயே இப்பொழுது அமானுல்லாகான் வசித்து வருகிறார். ஸர் பேசில் ஜாஹராப் என்பாருக்கும் அமானுல்லாகானுக்கும் நெருங்கிய நட்புண்டு. ஸர் பேசில், அமானுல்லாகானுக்குப் பணவிஷயங்களில் ஆலோசனை சொல்பவராக இருக்கிறார். சென்ற வருஷம் ஐரோப்பாவில் சுற்றுப்பிரயாணஞ் செய்துகொண்டிருந்த போது, அமானுல்லாகான், பலவித சாமான்களை வாங்கினர். மோடார் வண்டிகள், ரேடியோ கருவிகள், மின்சாரக் கருவிகள் முதலிய பலவற்றை வாங்கினர். இத்தலியிலுள்ள சான்ரிமோவிலும், பாரிஸிலும் இரண்டு மாளிகைகளில், மேற் கண்ட சாமான்களைப் பிரித்து வைத்து, அதில் தங்கப் போகிறார். அமானுல்லாகானின் மொத்த ஆஸ்தியின் மதிப்பு 5,000,0000 டாலர் என்று கூறப்படுகிறது. (ச-டை.)

---

## "நாமார்க்கும் குடி யல்லோம்"

திரு. சி. சரவணனர் எழுதியது:—இவ்வுலகத்திலேயுள்ள ஒவ்வொரு நாடும் ஒவ்வொரு துறையில் மேம்பட்டு விளங்குகின்றது. அவ்வாறே நமது தமிழ்நாடும் ஒரு துறையில் சிறப்புற்று விளங்குகின்றது. அஃதென்னை? அறவோடீர ஈனுவதிலென்க. நமது தமிழ்நாடு அளித்த பெரியாரில் அப்பரும் ஒருவரேயாவர். அப்பெரியாரது வாழ்நாட்களைப்பற்றி யான் ஓதவேண்டுவதில்லை. இத்தகைய அருள் வள்ளல் உலகுக்கு அறிவுறுத்திய உறுதி மொழிகளில் ஒரு சொற்றொடர் "நாமார்க்கும் குடியல்லோம்" என்பது.

ஒருமகன் உலக நிலையினின்றும் இறை யின்பத்தை வேண்டித் தவங்கிடப்பானுயின் அவன் பல கட்டுகளின்றும் விடுதலை பெற வேண்டும். அவ்வாறு அவன் விடுதலை பெறுமவற்றுள் சாதி, சமயம், உலகக்கட்டுப்பாடு முதலியவற்றினின்றும் போராடிச் சுயஆட்சி பெற வேண்டும். அவ்வாறே நாவுக்கரசரும் இறை இன்பத்தை வேண்டி நின்றவ ராகையால் அவரது இலக்கு உலக எல்லாக் குடிமைகளினின்றும் விடுதலை அடைவதாயிருந்தது. ஆதலினுற்றான் விடுதலை அடைந்த பின்பு தமது ஒப்பரிய நிலையை நோக்கி "நாமார்க்கும் குடியல்லோம்" என்று ஓதினுர்கள். நமது தமிழ் நாட்டில் இன்று சாதிப்போர், சமயப்போர், நாட்டுப்போர் முதலியன நிகழுகின்றன. இவையாவும் விடுதலையைக் குறிக்கொண்டதாயினும் தெய்வத்தன்மை பொருந்தவில்லை. எனெனில் நாவுக்கரசருடைய நாட்டம் இறைவன் மீது சென்ற படியே உலக விடுதலைமீதுஞ் சென்றது. அவர் உலக விடுதலைக்குப் போராடினர். ஆதலால் அவரது விடுதலை முறையில் தெய்வத்தன்மை கமழுகின்றது. இன்று நாம் ஆற்றிவரும் விடுதலைப் போர் அறத்தின்பாற்பட்டதாயினும் தெய்வ ஒளி பொருந்தப் பெறவில்லை. எனெனில் நமது விடுதலைப் போர் சாதியளவிலும் சமய அளவிலும் தேச அளவிலும் மட்டுப்பட்டு நிலைத்து நிற்கின்றது. இது பற்றியே காந்தியடிகளும் சகிப்பு, சத்தியாக்கிரகம் முதலிய தெய்வ வழிகளையே உலகவிடுதலைக்கு வழிப்படுத்துகிறார்கள்.

---

## இந்தியாவின் சுதந்திரம்

### குடியேற்ற நாடுகளையும் ஆலோசிக்க வேண்டுமோ?

'லண்டன் டைம்ஸ்' பத்திரிகையின் நவம்பர் மாதத்துப் பதினோராந் தேதி இதழில் பின் வருங் குறிப்பு காணப்படுகிறது:—

"சைமன் கமிஷன் அறிக்கை வெளியான பிறகு கூடப்போகும் சர்வகட்சி மகாநாட்டில் குடியேற்ற நாடுகளின் பிரதிநிதிகள் அழைக்கப்படுவார்களா என்ற யோசனை இதுகாறும் கொண்டுவரப் படவேயில்லை. இந்தியா வென்பது ஓர் ஏகாதிபத்தியப் பிரச்சினையே யாகும். ஆதலின், இது சம்பந்தமான முடிவு செய்யப்படும் பொறுப்பை ஏகாதி பத்தியத்திலுள்ள பிரிட்டிஷ் அல்லது ஐரோப்பியப் பிரஜைகளுக்குப் பங்கிடவேண்டிய தவசியமாகும்." ஜே. சாக்ஸன் மில்ஸ்.

இந்தியாவின் அரசியல் திட்டத்தைப் பற்றி நிர்ணயிக்கப்போகும் சர்வகட்சி மகாநாட்டில் குடியேற்ற நாடுகள் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்று ஏன் ஸ்ரீமான் சாக்ஸன் மில்ஸ் எதிர்பார்க்க வேண்டுமோ தெரியவில்லை! குடியேற்ற நாடுகளிலுள்ள ஐரோப்பிய பிரஜைகளுக்கும் இந்தியாவுக்கும் என்ன சம்பந்தம்? குடியேற்ற நாடுகளின் ஆட்சி முறையில் இந்தியா எப்படி பாத்தியம் கொண்டாட வில்லையோ, அப்படியே இந்தியாவின் ஆட்சி முறையிலும் குடியேற்ற நாடுகளுக்கும் பாத்திய மில்லை. அத்தகைய பாத்தியம் ஏதேனும் கொண்டாடப் பட்டால், ஏகாதிபத்தியம் சிதறுண்டுபோகும்.

—"நியு இந்தியா"

---

## பாகனேரியில் ஒரு பொதுக் கூட்டம்

(ஒரு நிருபரிடமிருந்து)

7-12-29-ல் இவ்வூர் ஆதித்திராவிடப் பள்ளிக்கூடத்தில் மதுரை ஸ்ரீமான் ந. சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் ஒரு பொதுக் கூட்டங்கூடியது. அவ்வமயம் அக்கிராசனர் முகவுரையில் தீண்டாதார் ஒற்றுமையுடனிருந்து எவ்வளவு துன்பம்வரினும், பொருட்படுத்தாது முன்னேற்ற மடையவேண்டு மென்றும், அவசியம் ஒவ்வொருவரும் தங்கள் பிள்ளைகளைப் படிக்கச் செய்யவேண்டு மென்றும் பேசினர். சிவகங்கை தாலுக்கா காங்கிரஸ் கமிட்டித்தலைவர் ஸ்ரீமான் ஆர். வி. சுவாமிநாத அவர்கள் ஆதித்திராவிடர்கள் முன்னேற்றமடைய வேண்டுமானுல் ஒவ்வொருவரும் கதரணிந்து காங்கிரசில் சேரவேண்டுமென்று பேசினர். பிறகு கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:—

1. கழனி வாசலில் கூடிய ஆதித்திராவிட மகாநாட்டுத் தீர்மானத்திற் கிணங்க இவ்வூர் ஆதித்திராவிடர் எல்லோரும் இறந்த மாடுகள் உண்பதை நிறுத்தியதைப்பற்றி இக்கூட்டம் மிகவும் பாராட்டுகிறது.

2. இவ்வூரில் தாலுக்கா போர்டு பள்ளிக்கூடம் 2வருடங்களாக இரு உபாத்தியர்களைக் கொண்டு நடத்தப்பட்டு வருவதில் இதுவரை தாழ்த்தப்பட்ட சாதிப் பிள்ளைகளைச் சேர்க்காதிருப்பதைப் பற்றி இக்கூட்டம் கண்டிக்கிறதுடன் இனிமேலாவது தாழ்த்தப்பட்ட சாதிப்பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்துக் கொள்ளும்படி இக்கூட்டம் தாலுக்காபோர்டாரவர்களைக் கேட்டுக்கொள்கிறது.

3. இவ்வூரிலுள்ள ஆதித்திராவிடர்கள் எல்லாரும் கதர் அணியவேண்டுமென்று இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

---





இங்கிலாந்தில் இப்பொழுது கிராமங்களின் இயற்கை அழகைப் பாதுகாக்க முயற்சிகள் நடைபெற்று வருகின்றன.

o o o

கப்பற்படைத் தலைவரும் சாஸ்திர அறிஞருமான ஸர் ஹென்ரி ஜாக்ஸன் 14-12-29-ல் லண்டனில் மரணமடைந்தார்.

o o o

விட்லி கமிஷன் நாகபுரியில் விசாரணை செய்து விட்டு 11-12-29ல் இரவு கான்பூர் வந்து சேர்ந்தது. 12-12-29-லிருந்து அங்கு விசாரணை நடத்தி வருகிறது.

o o o

ஜார்ஜ் மன்னரது பிரார்த்தனை நிதிக்கு இங்கிலாந்தில் மொத்தம் 689.597 பவுன் வசூலாயிருக்கிறது. இத்தொகை பல ஆஸ்பத்திரிகளுக்குப் பிரித்துக் கொடுக்கப்படும்.

o o o

தென்னிந்தியக் கிறிஸ்தவர்களில் பிரபலமான வரான ராவ்பகதூர் எம். ஜி. ஆரோக்கிய சாமிபிள்ளை தமது 72-ம் வயதில் கோயமுத்தூரில் 12-12-29ல் மரணமடைந்தார்.

o o o

புதிய டெல்லி விஸ்தரிப்புத் திட்டத்திற்கெனக் குறிப்பிடப் பட்டிருக்கும் 14 கோடி ரூபாயில் இராஜப் பிரதிநிதி மாளிகைக்கு மட்டும் 187 லட்ச ரூபா செலவழிந்திருக்கிறதாம்.

o o o

சென்ற வாரம் துருக்கி பிரதம மந்திரியான இஸ்மத் பாஷா, அங்கோரா தேசிய சபையில் பேசுகையில், துருக்கி மாதர்கள் உள்நாட்டில் செய்யப்படும் உடைகளையே அணிய வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

o o o

குவாலியர் இராஜ குமாரியான மேரி கமலா ராஜா சிந்தியா என்பார் 10 அடி 4 அங்குல நீளமுள்ள புலி ஒன்றைக் குவாலியருக் கருகிலுள்ள ராமபுரத்தில் சுட்டார். இத்துடன் இந்த இராஜகுமாரி ஐந்து புலிகள் சுட்டிருக்கிறார்.

o o o

கனம் ஆகாகான் 7-12-29ல் தாம் பிரஞ்சு மாதைத் திருமணம் செய்து கொண்டபோது அம்மாதுக்குத் தாம் 60 ஆயிரம் பவன் பெறுமான சொத்துக்களை அளித்ததாகப் பத்திரிகைகளில் வெளிவந்திருப்பது மறுக்கத்தக்கது என்று கூறுகிறார்.

o o o

டாக்டர் ஸன்யாட் ஸெனின் சவ அடக்கத்திற்கு இந்தியாவின் பிரதிநிதியாகச் சீனுவுக்குச் சென்றிருந்த புங்கி உத்தமர் ஜப்பானிலிருந்து கொழும்பு வழியாக 16-12-29ல் சென்னை போந்தார். அவர் லாகூர் காங்கிரஸுக்குச் செல்கிறார்.

o o o

சமாதானகாலங்களில் சாதாரணக் கோர்ட்டுகளால் விதிக்கப்படும் மரண தண்டனையை நீக்கி அதற்குப் பதிலாக என்ன தண்டனை ஏற்படுத்த வேண்டு மென்பதைப் பற்றி யோசனைசெய்யப் பிரிட்டிஷ்பார்லிமெண்ட் ஒரு கமிட்டியை நியமிக்கும்.

o o o

இந்து சமூகத்துள் "தீண்டத்தகாதார்" என்று கூறப்படும் வகுப்பினர், கோயில், பொதுஜன ஸ்தலங்கள் முதலிய விடங்களில் பிரவேசிக்க உரிமை யளிப்பதற்காக ஸ்ரீமான் ஜயகரால் இந்தியா சட்டசபையில் ஒரு தீர்மானம் கொண்டுவரப்படும்.

o o o

காலஞ் சென்ற பனகால் ராஜாவின் திருநாளை முன்னிட்டு 16-12-29 மாலை சென்னை விக்டோரியா பொது மண்டபத்தில் சென்னை அபிவிருத்தி இலாகா மந்திரி ஸ்ரீமான் சேதுரத்தினமய்யர் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது.

o o o

காபூலிலிருந்து இறுதியாகக் கிடைத்த செய்தியிலிருந்து, ஷின்வாரிகளின் கலவரம் இன்னும் ஓய்ந்தபாடில்லை யென்றும், சில மாலிக்குகள் பகிரங்கமாகக் காபூல் அரசாங்கத்துக்கு விரோதமாகப் பிரசாரம் செய்து வருகின்றன ரென்றும் தெரிய வருகின்றன.

o o o

அமெரிக்கா பாங்க் ஒன்றில், மோசம் புரிந்து விட்டு இங்கிலாந்துக்கு ஓடி விட்ட ஒரு மனிதனின் புகைப்படம், லண்டன் போலீஸ் அதிகாரிகளுக்குக் கம்பியில் லாத் தந்தி மூலம் தெரிவிக்கப்பட்டது. குறிப்பிட்ட மனிதர் உடனே கைதுசெய்யப்பட்டிருக்கிறார்.

o o o

மதுரை சேதுபதி உயர்தரக் கலாசாலைக் கட்டிடத்தில் நடைபெற்ற மதுரைத் தமிழ்ச் சங்க 28-வது ஆண்டு நிறைவு விழாவிற்குத் தலைமை வகித்த சர்நார்மன் எட்வர்ட் மார்ஷ் பாங்க்ஸ் தாமும் அச்சங்கத்தில் சேர விரும்புவதாகக் கூறித் தமிழில் ஒரு விரிவுரை நிகழ்த்தினர்.

## கலம்பகம்

அமெரிக்காவில் ஹென்றி போர்டு ஆலைகளில் வேலை செய்யும் தொழிலாளரின் தினசரிச் சம்பளம் ஆறுடாலராக விருந்தது இது போது எழுடாலராக உயர்த்தப்பட்டிருக்கிறது. இதனுல் ஹென்றி போர்டுக்கு இரண்டுகோடிடாலர் அதிகமாகச் செலவாகு மென்று தெரிகிறது.

o o o

இந்தியாவிலும், பர்மாவிலும் உள்ள பிரதான நகரங்கள் பலவற்றிற்குத் தபால்களை விமானங்களில் அனுப்ப ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறதென்றும், நீலமும், பச்சையும் கலந்த வர்ண முள்ள இரண்டணுத்தபால் ஸ்டாம்புகள் வெளியிடப்படுமென்றும் தபால் இலாகா தலைவர் தெரிவிக்கிறார்.

o o o

ருஷ்யாவிலுள்ள கடவுள் எதிர்ப்புச் சங்கத்தார் கிறிஸ்துமஸ் கொண்டாட்டத்தை எதிர்த்துப் பிரசாரம் புரிந்து வருகின்றன ரென்றும், கிறிஸ்துமஸ் மரங்களாக உபயோகிக்கப்படும் தேவதாரு மரங்களை வெட்டுவதும், விற்பதும் அரசாங்கத்தாரால் தடை செய்யப்பட்டிருக்கின்றனவென்றும் தெரிய வருகின்றன.

o o o

வட இந்தியாவில் வாய் (சாதாரா) என்னுமிடத்திலுள்ள சம்ஸ்கிருத பாடசாலையின் டைரக்டரும், பிரபல சாஸ்திரியுமான ஸ்ரீமான் நாராயண சாஸ்திரி மராட்டா என்பார் தீண்டாதார் ஆலயப் பிரவேசஞ் செய்ய அநுமதி யளிக்கவேண்டுமென்பதை ஆதரித்து ஸ்ரீமான் சேத்யமுனுலால் பஜாஜிக்கு ஒரு கடிதம் விடுத்திருக்கிறார்.

o o o

விருது நகரில் முக்கியமான பாதைகள் சில பழுது பார்க்கப் படாமலிருப்பதை முன்னிட்டும், அதை நகரசபையார் அவசியம் கவனிக்க வேண்டு மென்பதை முன்னிட்டும் 9-12-29ல் பொது ஜனங்கள் ஹார்த்தால் அனுஷ்டித்தார்கள். அன்று பல கடைகள் மூடப்பட்டிருந்தன என்று ஒரு பத்திரிகை நிருபர் அறிவிக்கிறார்.

o o o

சிங்கம் பட்டி ஜமீந்தார் மதுரைக்கு விஜயஞ் செய்த இராஜப் பிரதிநிதியைப்பேட்டி கண்டு பேசிய போது, அவர் இராஜப் பிரதிநிதி அறிக்கையை வரவேற்பதாகவும், சர்வகட்சி மகாநாட்டை ஒப்புக்கொள்வதாகவும், அம்மகா நாட்டில் ஜமீந்தார்களுக்கும் தக்க பிரதிநிதித்துவம் இருக்கவேண்டு மென்றும் குறிப்பிட்டதாக ஒருசெய்தி கூறுகிறது.

o o o

சீனத்தில் உள்நாட்டுக் குழப்பத்தில் கலகக் காரர்கள் தோல்வியடைந் திருக்கின்றார்களென்றும், அங்குள்ள பிரிட்டிஷ் குடிகளைக் காப்பாற்ற 5 குரூசர்களும், 8 அழிக்கும் கப்பல்களும், 5 சிறிய போர்க் கப்பல்களுமிருக்கின்றன வென்றும், திரு ஹெண்டர்ஸன் பார்லிமெண்டில் சீனநாட்டைக் குறித்து எழுந்த ஒருகேள்விக்குப் பதிலளித்தார்.

o o o

கல்கத்தாவில் ஸ்ரீமான் ஜே. எம். சேன் குப்தா "அட்வான்ஸ்" என்னும் பெயரிய ஆங்கில தேசிய தினப்பதிப்புப் பத்திரிகையொன்றை வெளியிடத் தீர்மானித்திருக்கிறார். லாகூரில் தேசியக் காங்கிரஸ் திறப்பு நாளன்று அப்பத்திரிகை ஆரம்பிக்கப்படுமென்றும், ஸ்ரீமான் சென்குப்தா அதன் தலைமை ஆசிரியராக விருப்பாரென்றும் தெரிய வருகின்றன.

o o o

தென்னிந்திய ரெயில்வேயில் பிரயாணஞ் செய்யும் இரண்டாம் இண்டர் வகுப்பு, மூன்றாம் வகுப்புப் பிரயாணிகள் இனி முறையே 50, 30, 25 சேர் நிறையுள்ள சாமான்களை இலவசமாக எடுத்துச் செல்லலா மென்றும், வழக்கம் போல் முதல் வகுப்புப் பிரயாணிகள் 60 சேர் எடுத்துச் செல்லலாமென்றும் மேற்படி ரெயில்வே அதிகாரிகள் நிர்ணயஞ் செய்திருக்கிறார்கள்.

o o o

லண்டனில் நடைபெற்ற பொது உடைமைக் கட்சியின் பொதுக் கூட்டத்தில், பிரிட்டிஷ் தொழிற் கட்சி அரசாங்கத்தார் இந்தியாவில் அடக்கு முறை ஆட்சி புரிவதையும். தொழிலாளர் பொது ஜன இயக்கத்தை நசுக்க முயற்சிப் பதையும் பலமாகக் கண்டிப்பதாக ஒரு தீர்மானம் நிறை வேற்றப்பட்டது என்று 15-12-29ல் கிடைத்த லண்டன் செய்தி ஒன்று கூறுகிறது.

o o o

இராஜப்பிரதிநிதி 10-12-29ல் மதுரைக்கு விஜயஞ் செய்த போது, கருப்புக் கொடிகளுடன் பகிஷ்கார ஊர் வலத்தை நடாத்திய காங்கிரஸ் தொண்டர்களான ஸ்ரீமான்கள் ஸ்ரீநிவாச வரதய்யங்கார், சிதம்பர பாரதி, செல்லப் பெருமாள், இராமாநுஜம் முதலியவர்களைப் போலீஸார் தாக்கி, அவர்களிடமிருந்த கொடிகளையும் பிடுங்கிக் கொண்டதாக ஒரு பத்திரிகை நிருபர் அறிவிக்கிறார்.

o o o

லாகூரில் லாலா லஜபதிராயின் உருவச் சிலை 26-12-29ல் திறந்துவைக்கப்படுமென்று அறிவிக்கப்படுகிறது. ஆனுல் இன்னும் இடத்தைக் குறித்து அரசாங்கத்தார் ஒரு முடிவுக்கும் வரவில்லை. அதற்காக லாகூர் ஆரிய சுயராஜ்ய சபையினர் பத்திரிகை, கூட்டம் இவைகளின் மூலம் கிளர்ச்சி செய்ய வேண்டுமெனத் தீர்மானித்துக் கிளர்ச்சிக் கூட்டங்கள் நடத்தி வருகின்றனர்.

o o o

சர்வதேச சங்க மலேரியா கமிஷன் 11-12-29ல் சென்னை வந்து சேர்ந்து, பிறகு ஈரோடு, மேட்டூர் இவ்விடங்களுக்குச் சென்றது. 15-12-29ல் குன்னூர் போந்து மலேரியாவைத் தடுக்க வேலை நடைபெறும் இடங்களைப் பார்வையிட்ட பின்னர் உதகமண்டலத்திற்குச் சென்றது. இவ்விடத்தைப் பார்வையிட்ட பின்னர் மைசூருக்குப் பிரயாணமாகும். அங்கிருந்து 28-12-29ல் ஐரோப்பாவுக்குப் பிரயாணமாகும்.

o o o

சிதம்பரம் தாலுக்காவைச் சேர்ந்த பெரிய மிராசுதாரரான முகையூர் ஸ்ரீமான் எ. சுப்பிரமணியம் பிள்ளை, சிதம்பரம் ஸ்ரீ நடராஜர் ஆலய நித்தியக்கட்டளைக்காக ரூ 2,10,000-ம் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமிகள் ஆலயத்திற்கு ரூ. 20,200-ம் அண்ணாமலை சர்வகலா சாலை புத்தகசாலைக்காக ரூ 22,000-ம், இன்னும் நவராத்திரி திருவிழாக் கொண்டாடுவதற்காக இளமணியனார் கோயிலுக்கு ரூ 16,000-ம் தர்மமாக அளித்திருக்கிறார்.

o o o

சென்னைத் திருவல்லிக்கேணிக் கடற்கரை திலகர் கட்டத்தில் 10-12-29ல் சீகாழி ஸ்ரீமான் சாமிநாதஞ் செட்டியார் தலைமையில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் "சிறைச்சாலை வாசக் கஷ்டங்கள்" என்பது பற்றிக் குடியாத்தம் ஸ்ரீமான் சாமிநாத முதலியார் ஒரு விரிவுரை நிகழ்த்தினர். அது போது அவர் சிறைச்சாலைக் கஷ்டங்களை ஒழிக்க வேண்டுமானுல், ஸ்ரீயதீந்திரரைப் பின்பற்ற வேண்டுமென்று குறிப்பிட்டார்.

o o o

இங்கிலாந்தில் உண்டான பெரும்புயலினுல், கடலோர நகரங்களில் பெரும் சேதம் விளைந்திருக்கிறது. பலகப்பல்களுக்குமிகுந்த சேதம் ஏற்பட்டிருக்கிறது. இன்னும் பல கப்பல்கள் ஆபத்தான நிலையிலிருக்கின்றன வென்று தெரியவருகிறது. தேம்ஸ் நதியில் வெள்ளம் உண்டாயிருக்கிறது. இப்பொழுது புயல் அடங்கி யிருக்கிறதென்றும், நதிகளில் வெள்ளமும் குறைந்து வருகின்றன வென்றும் கடைசியாகக் கிடைத்த செய்தி கூறுகிறது.

o o o

ஜெயங் கொண்டபுரம் இராமநாதன் கலாசாலையின் மூன்றாவது ஆண்டுவிழா நிகழும் சுக்கில ஆண்டு மார்கழித்திங்கள் எட்டாம் நாள் ஞாயிற்றுகிழமை மாலை ௪-மணிக்குக் கீழைச் சிவல்பட்டி சாண்டோ லெ. சோமசுந்தரஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெறும். அப்பொழுது மாணாக்கர் மாணாக்கியருடைய பாட்டு, பேச்சு, நடிப்பு நாடகம் முதலியன நடைபெறும். பெரியார் பலரும் சொற்பொழிவு நடத்துவார்கள் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

o o o

அண்மையில் அமெரிக்காவில் ஆபர்ன் பிரதேசத்திலுள்ள சிறைச்சாலைக்கைதிகள் கலகஞ்செய்து தங்களை விடுதலை செய்யாவிடில் சிறை அதிகாரிகளைச் சுட்டு விடுவதாகப் பயமுறுத்தினர்கள். தந்திக் கம்பிகளை அறுத்தெறிந்தனர். கொஞ்ச நேரத்திற் கெல்லாம் இராணுவப்படை வரவழைக்கப்பட்டது. அதன் பிறகே கலகம் அடங்கிற்று. இராணுவப் படைக்கும், கைதிகளுக்கும் நடைபெற்ற சண்டையில் 18 பேர் மாண்டனர். இவர்களுள் ஆறு கைதிகள் பீரங்கி வாயில் வைத்துச் சுடப்பட்டனர்.

o o o

14-12-29ல் நடைபெற்ற ஐக்கியமாகாண சட்டசபைக் கூட்டத்தில் அரசியல் சம்பந்தமான கைதிகள், விசாரணையிலுள்ளவர்களா யிருந்தாலும் அல்லது சிறைத்தண்டனை அநுபவித்து வருபவர்களா யிருந்தாலும் 31-12-29க்கு முன்பு பொது மன்னிப்பு அளித்து அவர்களை யெல்லாம் விடுதலை செய்யும்படி அரசாங்கத்தாருக்கு சிபார்சு செய்வதாகக் கொண்டு வந்த தீர்மானமும், அரசாங்கத்தார் தங்களுடைய எல்லா இலாக்காக்களிலும், ஸ்தாபனங்களிலும் கதரை உபயோகிக்க வேண்டு மென்ற தீர்மானமும் நிறைவேறின.

o o o

இலங்கையிலுள்ள குதிரைப் பந்தயக் கடைகளை 15-12-29-க்குள் மூடிவிட வேண்டு மென்று போலீஸார் இரண்டாம் முறை ஓர் உத்தரவு அனுப்பியிருக்கின்றன ரென்றும், இதன்படி எல்லாக் கடைகளும் மூடப்பட்டு விட்டதாயினும் இரண்டு பெரிய பந்தயக் கடைகள் மட்டும் மூடப்படவில்லை யென்றும், போலீஸார் வழக்குத் தொடுத்து அதன் மூலம் இந்த உத்தரவு செல்லுபடியாகிறதாவென்று பார்ப்பதற்காக அவர்கள் கடைகளைத் திறந்து வைத்திருக்கிறார்களென்றும் "டைம்ஸ் ஆப் ஸிலோன்" பத்திரிகையில் ஒரு செய்தி காணப்படுகிறது.

o o o

13-12-29 இரவு சுமார் 8-மணிக்கு காட்டுமன்னார் கோயில் உடையார்குடி செங்குந்தர் மாணவர் சங்கத்தின் 5-வது கூட்டம் செங்குந்தர் பொது மடாலயத்தில் திருவாளர் கி. கணபதி முதலியார் அவர்களின் தலைமையில் கூடியது. பல அன்பர்கள் சொற்பொழிவு நிகழ்த்தினர்கள். ஷை செங்குந்தர் பொது மடாலயத்தில் 24-11-29 முதல் திருவாளர். மு. செ. மாணிக்க முதலியாரால் இரவு பாடசாலை (Night school) ஒன்று திறக்கப்பட்டு சுமார் 24 பிள்ளைகளுக்கு இலவசமாகக் கல்வி போதித்து வருகிறார் என்று திருவாளர் மு. செ. சின்னத்தம்பி முதலியார் அறிவிக்கிறார்.

o o o

கல்கத்தா கலாசாலை ஆசிரியர் ஸ்ரீமான் கே. பானர்ஜியின் மனைவியான 28வயதுள்ள ஸ்ரீமதி ஜோதிர்மாயி தேவியும், அவரது கைக் குழந்தையும், தாதியும், கல்கத்தாவுக்கு 25 மைல் தூரத்திலுள்ள கார்டா என்னும் ஸ்டேஷனிலுள்ள ஓர் அறையில் 'கார்பானிக் ஆஸிட் காஸ்' என்னும்விஷக்காற்றின் காரணமாக 14-12-29-ல் இறந்துகிடந்தனர். அவர்கள் தங்கியிருந்த அந்த அறைக்குள் கரி அடுப்பு எரிந்து கொண்டிருந்த தென்றும், அதிலிருந்தே இந்த நச்சுக்காற்று உண்டாயிற்றென்றும், அவர்கள் தங்கியிருந்த அறையின் கதவுகளும், ஜன்னல்களும் மூடப்பட்டிருந்தன வென்றும் தெரியவருகின்றன.

o o o

அமெரிக்காவின் தலைவரான ஸ்ரீமான் ஹூவர் அநுஷ்டித்துவரும் கொள்கைகளைக் கண்டிப்பதற்காக, நியூயார்க்கிலும், வாஷிங்டனிலும், ஒரேசமயத்தில் பொதுவுடைமைக் கட்சியினர் கிளர்ச்சி செய்தார்கள். இவர்களில் 60 பேர் கைது செய்யப்பட்டார்கள். கைது செய்யப் பட்டவர்களனைவரும் இளைஞர்கள். ஆகவே, ஸ்ரீமான் ஹூவர், அவர்களை ஓர் இரவு சிறை வைத்தால்கூட, அவர்களுக்குத்தியாகிகளென்னும் பட்டம் உண்டாகி விடுகிறதென்றும், அதனுல் அவர்களை விடுதலை செய்து விட வேண்டு மென்றும் சிபார்சு செய்ததின் பேரில், அவர்கள் விடுதலை யடைந்தார்கள் என்று 'நியூயார்க்' செய்தி ஒன்று கூறுகிறது.

o o o

காசி ஹிந்து சர்வகலா சாலையின் 12-வது பட்டமளிப்பு விழா 14-12-29-ல் நடைபெற்றது. அதுபோது மேற்படி கலாசாலையின் உப அத்கியட்சகரான பண்டித மாளவியா விரிவுரை நிகழ்த்தியபோது, பண்டைய நூல்களையும், தற்கால நவீன மேல்நாட்டு சயன்ஸ்களையும் கற்க வேண்டுமென்றும், கல்வி தாய்மொழியில் கற்பிக்கப்படுவது அவசியமென்றும், அந்நிய மொழியைக் கற்பதில் மாணவர்களுடைய அருமையான காலத்தில் பெரும்பாகம் வீணுகப் போகிறதென்றும், இரண்டாண்டுகளுக்கு முன்னர் இந்தியா குடியேற்ற நாட்டுப் பதவிபெறப் போவதாகக் கூறியபோது எவரும் நம்பவில்லை என்றும், ஆனுல் இப்பொழுது குடியேற்ற நாட்டுப் பதவி வந்துகொண்டிருப்பதாக நம்புவதாகவும் குறிப்பிட்டார்.

o o o

ஆண் பெண்ணாக மாறியவிந்தை:—புத்தூருக்கு 12-மைல் தூரத்திலுள்ள கவிட்டுப்புரம் என்னும் கிராமத்தில் ஜடஜ்காடு என்று வழங்கும் முனிசாமி என்னும் சுமார் 25 வயதுடைய ஒரு கூலியாள் பெண்ணாக மாறிய விந்தையைக் குறித்து ஹிந்து பத்திரிகை நிருபர் எழுதியுள்ள ஒரு நிருபத்தில், தாம் அவ்வூருக்குச் சென்று அவனைப் புகைப்பட மெடுத்ததாகவும், அப்போது மார்பை மறைத்திருந்த துணியை எடுக்க அவன் நாணியதாகவும், பின்னர் தூண்டுதலின் பேரில் அணியை எடுத்ததாகவும், அவன் திடகாத்திரனுயிருப்பதுடன், பெண்கள்போலவேதலைமயிரைக்கோதி முடித்திருப்பதாகவும் குறிப்பிட்டிருக்கிறார்.

## தபாற்காரர் மகாநாடு

### நிறைவேறிய தீர்மானங்கள்

1929-ம் வருஷம், டிசம்பர் மாதம் 15-ந் தேதி மாலை 4மணிக்குச் சென்னைப் பார்க்கு டவுன் பரமானந்த தாஸ் சோடாதாஸ் சத்திரத்தில், சென்னை, செங்கல்பட்டு, தென்னார்க்காடு ஜில்லாக்களின் தபாற்காரர்கள் மகாநாடு கூடிற்று. இம்மகாநாட்டிற்குச் சென்னைப் பிரதிநிதிகளே யன்றிச் செங்கல்பட்டு, தென்னார்க்காடு ஜில்லாக்களிலிருந்தும் பிரதிநிதிகள் ஏராளமாக வந்திருந்தார்கள். மௌலானா அப்துல்லத்தீப் பருக்கி எம். எல். ஏ. இம்மகாநாட்டிற்குத் தலைமை வகித்தார். கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:—

#### தீர்மானங்கள்

1. ஜார்ஜ் சக்ரவர்த்தியவர்களுக்குத் தபால்காரர்களடங்கிய இம்மகாநாடு தமது பணிவைத் தெரிவித்துக் கொள்கிறது.

2. சென்னை நகரத்திலும் செங்கல்பட்டு, தென்னார்க்காடு முதலிய ஜில்லாக்களிலும் வீட்டு வாடகை அதிகமா யிருப்பதால் யூனியன்கள், தாலுக்கா போர்டுகள், முனிசிபல் சபைகள் முதலியவைக ளிருக்குமிடத்தில் தபால்காரர்களுக்கும், சில்லரைச் சிப்பந்திகளுக்கும் போதுமான வாடகை அலவன்சு கொடுக்கவேண்டு மென்று இம்மகாநாடு அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்கிறது.

3. அரசாங்கத்தார் 5 வருஷத்திற்குள் எல்லாத் தபால்காரர்களுக்கும் மற்றச்சிப்பந்திகளுக்கும் உடையளிப்பதாக வாக்களித்திருப்பதை அரசாங்கத்துக்கு ஞாபகமூட்டுவதோடு செங்கல்பட்டு ஜில்லாவிலும், தென்னார்க்காடு ஜில்லாவிலும், யாவருக்கும் உடைகள் அளிக்க வேண்டு மென்று இம்மகாநாடு அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறது.

4. தபால் காரர்களுக்கும், மற்ற சிப்பந்திகளுக்கும் வருஷத்தில் சம்பளத்துடன் 20 நாள் ரஜா கொடுப்பதாக அரசாங்கத்தார் ஒப்புக் கொண்டிருந்தும் அவசரமான சில முக்கிய சமயங்களில் கூட ரஜா கிடைப்பது அதிகக் கஷ்டமா யிருப்பதால், போதுமான ரிசர்வ் சிப்பந்திகளை நியமித்துச் சுலபமாக ரஜா கிடைக்கும்படியான சௌகரியங்களைச் செய்வதோடு, ரஜா எடுக்கும் ஒருவருக்குப் பதிலாக நியமிக்கப் படுகிறவருக்கு ரஜா எடுப்பவர் சம்பளம் கொடுக்க வேண்டியில்லாமலுமிருக்க வழிசெய்ய வேண்டுமென்று அரசாங்கத்தாரை இம்மகாநாடு கேட்டுக்கொள்ளுகிறது.

5. தபால் காரர்கள் தபால் பெட்டிகளைத் திறந்து தபால்களைக் கொண்டு வருவது, மெயில்களைக் கொண்டு போவது முதலிய கீழ்த்தர வேலைகளையும் செய்யவேண்டியிருக்கும் வழக்கம் இன்னும் பல விடங்களிலிருப்பதால், அரசாங்கம் இப்பழக்கத்தை நிறுத்துவதற்காக உடனே தக்க உத்தரவைப் பிறப்பிக்க வேண்டுமென்று இம்மகாநாடு அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்கிறது.

6. சப்போஸ்டு மாஸ்டர்களுக்கு எவ்வளவு பொறுப்பும் கடமையும் இருக்கிறதோ அதே பொறுப்பும் கடமையும் கிராமப் போஸ்டு மாஸ்டர்களுக்கும் இருப்பதால் அவர்களுக்குக் குறைந்த சம்பளமே கொடுப்பதென்று செய்திருக்கும் முடிவை விட்டுக் குறைந்தது 25 ரூபாவாவது சம்பளம் கொடுக்க வேண்டுமென்று இம்மகாநாடு கேட்டுக்கொள்கிறது.

7. அரசாங்கத்தபால் காரர்களுடன் பச்சாதாபம் கொண்டு வந்திருக்கும் சி. கிளாஸ் குமாஸ்தா முறையை அனுமதித்திருந்தும் அதை நடை முறைக்குக் கொண்டு வருவதற்குத் தாமத மேற்பட்டிருக்கிற தாகையால் இனியும் எத்தகைய தாமதமு மின்றி அதை அமுலுக்குக் கொண்டு வரும்படி அரசாங்கத்தாரை இம் மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

8. ஞாயிற்றுக் கிழமைகளிலும் மற்ற விடு முறைகளிலும் தபால் காரர்களுக்கு விசேஷ சம்பளம் கொடுப்பதோடு, தலைமை ஸ்தானத்திலிருந்து வெளியில் வேலை செய்ய வேண்டிய கிராமத் தபால் காரர்களுக்கும் விசேஷ அலவன்ஸ் கொடுக்க வேண்டு மென இம் மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

9. (அ) போஸ்டு மாஸ்டர் ஜெனரலின் உத்தரவிற்கு விரோதமாக சில போஸ்டு மாஸ்டர்கள் தபால் காரர்களை அனாவசியமாக மாற்றிக் கஷ்டத்திற்குள்ளாக்கி வருகிறார்களாகையால் இதைக் குறித்துச் சமீபத்தில் செங்கல்பட்டு ஜில்லாவிலும் தென்னார்க்காடு ஜில்லாவிலும் நடந்திருக்கும் மாற்றங்களைக் கவனிக்கும்படி போஸ்டு மாஸ்டர் ஜெனரலை இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

(ஆ) காஞ்சிபுரம் தலைமைப் போஸ்டாபீஸில் செய்திருக்கும் மாற்றங்களெல்லாம் அநியாயமானவை களாயிருப்பதோடு யூனியனில் தீவிரமாக உழைத்து வரும் சில அங்கத்தினர்களுக்குத் தீங்கிழைக்கும் நோக்கத்தோடேயே அத்தகைய மாற்றங்களெல்லாம் நடந்திருப்பதாகத் தெரிவதால், அதைக் குறித்துப்போஸ்டு மாஸ்டர் ஜெனரல்நேரே விசாரித்து நீதி வழங்க வேண்டுமென இம் மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

10. தபால் இன்ஸ்பெக்டர்களுக்கு எத்தகைய அலவன்சுகள் கொடுக்கிறார்களோ அதேமாதிரியே ஓவர் ஸியர் தபால்காரர்களுக்கும், மெயில் ஓவர்ஸியர் தபால் காரர்களுக்கும் கொடுக்க வேண்டுமென இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

11. சிதம்பரம், காஞ்சிபுரம், திருப்பாதிரிப் புலியூர், பண்ருட்டி முதலிய இடங்களுக்கு மெயில்பியூன் ஒருவரை அதிகமாகக் கொடுக்க வேண்டுமென இம் மகாநாடு போஸ்ட் மாஸ்டர் ஜெனரலைக் கேட்டுக் கொள்ளுகிறது.

12. ஸ்பெஷல் ஓவர்ஸியர் தபால் காரர்களுக்கும், இன்ஷூர் டெலிவரி தபால் காரர்களுக்கும் ரூ. 40-5-90 கிரேட் சம்பளமே கொடுத்துக் கொண்டு வருவதால், ரங்கூனில் அனுஷ்டிக்கும் முறையை அனுஷ்டித்து இவர்களுக்குச் சம்பளத்தை உயர்த்த வேண்டுமென்று இம்மகாநாடு கேட்டுக் கொள்ளுகிறது. ரூ. 40-5-90 சம்பளத்தை மறுப்பதும் ஸ்பெஷல் ஓவர்ஸியர்களுக்குக் கொடுத்துக் கொண்டு வந்த வேலை அலவன்ஸ் ரூ.10 ஐ ரத்து செய்து விட்டதும், ரங்கூனில் மாத்திரம் இதே வேலைக்கு ரூபா. 70-4-110 கொடுத்துக்கொண்டு வரும் பொழுது, இங்கு மாத்திரம் குறைத்திருப்பது அக்கிரமமென்றும் கருதுவதோடு, அது போன்றே இங்கும் சம்பளம் கொடுக்கவேண்டுமென்று இம்மகாநாடு அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்ளுகிறது.

13. நகரில் பூக்கடை, பார்க்டவுன், மண்ணடி முதலிய தபாலாபீசுகளில் தினமொன்றுக்கு ஸ்டாம்பு வெண்டர்கள் ரூ. 250க்கு மேல் ஸ்டாம்பு விற்றுவருவதால், அவர்களை ஸ்டாம்பு வெண்டர்களாக எடுத்துக் கொள்வதோடு அதற்கேற்றபடி சம்பளத்தை அதிகரித்துக்கொடுக்க வேண்டுமென்றும் இம்மகாநாடு அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்ளுகிறது.

14 இப்பொழுது உயர்த்தியிருக்கும் செக்யூரிடி தொகையான ரூ. 1000த்தை ரத்து செய்து, பழையபடியே ரூ. 250ஐ செக்யூரிடி தொகையாக வைத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொள்வதோடு பிரத்தியேகவேலைகளுக்கு அலவன்ஸ் கொடுக்க வேண்டுமென்றும் இம்மகாநாடு அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்ளுகிறது.

15. மெயில் பியூன்கள் 1200 தோலாவிற்கு மேல் தூக்கிக்கொண்டு போகும்படி செய்யாதிருக்கும்படி கவனித்துக் கொள்ள வேண்டுமென இம்மகாநாடு அதிகாரிகளைக் கேட்டுக் கொள்ளுகிறது.

16. ஜில்லாவிலுள்ள எல்லா சப்ஆபீஸ்களிலும், செலக்டட் கிரேட் டெலிவரி ஆபீஸ்களிலும், சார்ட்டிங் போஸ்ட்மேன் ஒருவரை நியமிக்க வேண்டுமென இம்மகாநாடு கேட்டுக் கொள்வதோடு, ஓவர்ஸியர் போஸ்டுமேன்களை நியமிப்பதில், சர்விஸ் அதிக மானவர்கள் வாரியாகத் தேர்ந்தெடுக்கவேண்டு மென்றும் இம்மகாநாடு அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்ளுகிறது.

---

### இராஜப்பிரதிநிதி சென்னை விஜயம்

இராஜப்பிரதிநிதி லார்ட் இர்வின் அவர்கள் தமது மனைவியாருடனும், பரிவாரங்களுடனும் 12-12-29 காலை 8-10மணிக்குச்சென்னை எழும்பூர் ரயில்வே ஸ்டேஷன் வந்து சேர்ந்தார். அப்போது அவர் வந்ததற்கு அறிகுறியாக 31 குண்டுகள் போடப்பட்டன; முதலில் சென்னைக் கவர்னரும் பின்னர் பல கனவான்களும் அவரை வரவேற்றனர். பின்னர் இராஜப்பிரதிநிதி காலை 8 30 மணிக்கு நகரசபைக்குச் சென்று அங்கே அளிக்கப்பட்ட உபசாரப்பத்திரத்தைப் பெற்றுக்கொண்டு அதற்குத் தகுந்த பதிலளித்தார். காலை 11-30மணிக்கு அவருக்கு அரசாங்க மாளிகையில் 11 பொது ஸ்தாபனங்களின் சார்பாக உபசாரப் பத்திரங்கள் வாசித்துக்கொடுக்கப்பட்டன. பின்னர் இர்வின் தம்பதிகளுக்குக் கவர்னர் தம்பதிகள் தமது மாளிகையில் ஒரு விருந்து நடத்தினார்கள். 13-12-29 காலை அரசாங்க நிருவாக சபை அங்கத்தினர், மந்திரிகள் முதலியவர்களுக்கு இர்வின் பிரபு பேட்டிக் கொடுத்துப் பேசினார். பிறகு செயின்ட் ஜார்ஜ் கோட்டை, சட்டசபைக் கட்டிடம், கோட்டையிலுள்ள கல்லறை இவைகளைப் பார்வையிட்டார். இக்கல்லறையில் தம்முடைய மூதாதையருள் ஒருவர் அடக்கஞ் செய்யப்பட்டிருப்பதாகக் கூறினார். 14-12-29 காலை ஆர்க்காட்டு இளவரசர், ஜெயபூர் மகாராஜா முதலிய பல சிற்றரசர்களுக்குப் பேட்டிக் கொடுத்துப் பேசினார். அன்று பிற்பகல் கிண்டி குதிரைப் பந்தயத்துக்குச் சென்று பந்தயச் சங்க ஸ்டூவர்டுகளுடன் விருந்துண்டார். 15-12-29 பிற்பகல் 2-30 மணிக்கு இர்வின் தம்பதிகள் சென்டிரல் ஸ்டேஷனிலிருந்து பிரத்தியேக வண்டியில் ஹைதராபாத்துக்குப் புறப்பட்டுச் சென்றார்கள். இவருடைய பிரயாணம் அந்தரங்கமாயிருந்தது. அதனால் 16-12-29 காலையே குண்டுகள் போடப்பட்டன. இராஜப் பிரதிநிதியும் அவரது மனைவியாரும் 16-12-29ல்சிகிந்திராபாத் அடைந்தனர். அங்கு அவர்கள் நிஜாம் அரசராலும் அவருடைய சமஸ்தான உத்தியோகஸ்தர்களாலும் வரவேற்கப் பட்டார்கள். அன்று அவர்கள் நிஜாம் மன்னரின் விருந்தினராக விருந்தார்கள்.

---

### லாகூர் காங்கிரஸ்

லாகூரில் நடைபெறப் போகும் அகில இந்திய காங்கிரஸுக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் பெரும்பாலும் முடிவடைந்து விட்டன. காங்கிரஸ் நடைபெறப்போகும் ரவி நதிக் கரையிலுள்ள இடத்திற்கு லஜபதிராய் நகரம் எனப்பெயரிடப்பட்டிருக்கிறது. காங்கிரஸ் பந்தல் 'டேன்பார்க்'கில் அழகாக அமைக்கப்பெற்றிருக்கிறது. பிரதிநிதிகளும், பார்வையாளர்களும் மாலைப்பொழுதைச் சந்தோஷமாகக் கழிக்க ரவிநதிக் கரையில் ஒரு நந்தவனம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதன் மத்தியில் லஜபதிராயின் உருவச்சிலை ஒன்று வைக்கப்பட்டிருப்பது மக்கள் மனதைக் கவரத் தக்கதா யிருக்கிறது. இவ்வாண்டு இங்குக் குளிர் அதிகமா யிருந்துவருவதை முன்னிட்டு, ஒரே சமயத்தில் 220 பேர் ஸ்நானம் செய்ய வெந்நீர்க் குழாய்கள் போடப்பட்டிருக்கின்றன. குளிர் முதலியவைகளைத் தடுக்கவேண்டி பலமான கூடாரங்கள் அமைக்கப் பெற்றிருக்கின்றன.

காங்கிரஸ் பொருட் காட்சிக்கு இடம் தயாராகிக் கொண்டு வருகிறது. கதர் கடைகளுக்குப் பாதி கட்டணமே வசூலிக்கப்படுமென்று அறிவிக்கப் படுகிறது. காங்கிரஸ் பொருட் காட்சியில் கதர்க் காட்சிக்கே மிகவும் சிறப்பளிக்கப்பட்டிருக்கிறது. காட்சி மைதானத்திலுள்ள எட்டு மண்டபங்களில் நான்கு, கதர் காட்சிக்கே ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. லாகூர் காங்கிரஸ்காரர்கள் காட்சியைச் சிறப்பாக நடத்துவதில் தங்கள் எண்ணத்தைச் செலுத்தி வருகின்றார்கள். பொருட்காட்சியை ஸர் பி. சி. ராய் திறந்துவைப்பார்.

காங்கிரஸ் தலைவரான பண்டித ஜவஹரிலால்நேரு ஒருகுதிரைமீதுஅமர்ந்துசெல்வார். அவருக்கு முன்னால் நூறு குதிரைப்படைத் தொண்டர்கள் போவார்கள். அவருக்குப் பின்னால் மற்ற காங்கிரஸ் தலைவர்கள் மோட்டார் வண்டிகளில் செல்வார்கள். இவர்களுக்குப் பின்னால் சுமார் ஆயிரம் தொண்டர்களடங்கிய ஊர்வலம் ஒன்று தொடரும்.

சென்ற ஆண்டு நடந்ததைப் பின்பற்றி தலைவரான பண்டித ஜவஹரிலால் நேருவே 29-12-29 ல் காங்கிரஸ் கூடுவதற்கு இரண்டு மணி நேரத்திற்கு முன்னர் தேசியக் கொடியேற்றவிழாவை நடத்திவைப்பா ரென்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

---











## உதிர்ந்த மலர்கள்

சௌத்வார்க் பிஷப் :—ஏழைகள் வசிக்கும் ஒவ்வோர் இடமும் ஆண்டவன் அத்தனையிருக்குந் தன்மையை மறப்பதாகும்.

* * *

ஸ்ரீமான் வால்டர் ரன்ஸிமான் :—கோடீச்வரர்களுக்கு இந்த உலகத்தில் அளவுக்கு மீறிய மரியாதை கொடுக்கப்படுகிறது.

* * *

அறிஞர் ஈன்ஸ்டீன் :—ஆரம்ப முதல் முடிவுவரை எல்லாம் ஒரு நிர்ணயத்திற் குட்பட்டிருக்கின்றன.

* * *

ஸ்ரீமான் ஏ. பி. ஹெர்பர்ட் :—சாக்கடையோரத்தில் வசிக்கும் பிரஜைக்கும் மோடார் வண்டியில் செல்லும் பிரஜைக்கும் ஒரேவித உரிமை உண்டு என்று சட்டஏளவில் கூறப்படுகிறது. ஆனால் முன்னவன், சக்கரத்தில் அகப்பட்ட கோழியைப்போன்ற நிலைமையிலேயே இருக்கிறான்.

* * *

லண்டன் ஆங்கிலோ இந்திய மதுவிலக்குச் சங்கக் காரியதரிசி :—இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னர் ஆங்காங்கு சில வகுப்பினர் குடித்து வந்தனர். சென்ற ஐம்பது ஆண்டுகளுக்குள் மதுபான வழக்கம் அதிவேகமாகப் பரவி வந்திருக்கிறது. முன்னாளில், அரசாங்க ஆதரவின்றி மதுபான விற்பனை நடைபெற்றது. இப்பொழுது, அரசாங்கத்தாருக்குக் கிடைக்கும் வருமானத் துறைகளில் மதுபான மூலமாக வரும் வருவாய் முக்கியமான தொன்றாகி விட்டது.

* * *

ஸ்ரீமான் லாயிட்ஜார்ஜ் :— ஆயுதபாணிகளான மூன்று கோடி மனிதரை வைத்துக் கொண்டு, உலகத்தில் நீங்கள் சமாதானத்தை ஏற்படுத்த முடியாது. பீரங்கிகள் நிறைந்திருக்கும் பாதையில், சமாதான இரதத்தை நீங்கள் செலுத்திக் கொண்டுபோக முடியாது. நீங்கள் துவேஷத்தை ஒழித்து, சமாதானத்தை நிலைநாட்ட வேண்டும்.

* * *

ஸர் சி. பி. இராமசாமி ஐயர்:—இந்தியா, வளர்ச்சி யடைந்து கொண்டு வரும் ஒரு மனிதனைப்போன்றது. அது தானே புதிய துறைகளில் இறங்கிப் பரிசோதனை செய்ய விரும்புகிறது. தன் தவறுகளைக் கொண்டு கற்றுக் கொள்ள ஆசைப்படுகிறது.

* * *

ஸ்ரீமதி விட்லி :— இந்தியா ஆச்சரியமானதொரு தேசம்; இந்தியர்கள் பொறுமையும் நற்குணமும் வாய்ந்தவர்கள்.

* * *

ஸ்ரீமான் விட்லி :— ஆமதாபாத் தொழிலாளர்களிடை காந்தியடிகள் இருப்பது ஓர் அதிர்ஷ்டமேயாகும். தொழிலாளர்களிடையும் முதலாளிகளிடையும் அவருக்கு நிரம்பிய செல்வாக்கு இருக்கிறது. இருசாராரும் காந்தியடிகளின் தீர்ப்பை ஏற்றுக்கொள்கின்றனர். இதனால் அங்கு வேலைநிறுத்தங்கள் குறைவாயிருக்கின்றன.

* * *

ஸ்ரீமான் ராம்ஸே மாக்டோனல்ட் :— நான் இப்பொழுது பிரதம மந்திரியோ இல்லையோ, எந்தத் தொழிலாளர் குலத்தில் பிறந்தேனோ அந்தத் தொழிலாளனாகவே இப்பொழுதும் நான் இருக்கிறேன்.

* * *

ஸர் ஆலிவர் லாட்ஜ் :— அயலகத்தார் நம்மைக் கன்னத்தில் அடிக்கப் போகிறார் என்று நாம் எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருப்போமானால் நமது வாழ்க்கை மிகவும் பரிதாபகரமாக இருக்கும்.

---

டார்கிங் என்ற ஊரில் வர்ணம் பூசும் தொழிலுடையவர்கள், வேலை முடிந்த பிறகு தங்கள் பிரஷ்களை ஒரு சுவரில் தேய்ப்பது வழக்கமாயிருந்தது. இங்ஙனம் சுமார் நூறு வருஷம் வரை தேய்த்துக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. இப்படித் தேய்த்துத் தேய்த்துக் கடைசியில் மேற்படி இடம் ஒரு கட்டியாகியது. இஃது இரண்டு அடி நீளமும் பன்னிரண்டு அங்குல அகலமும் நான்கு அங்குல கனமும் உள்ளதாயிருக்கிறது.

## உலகக் காட்சி

### காதல் மணம்

டாக்காவில் ஐம்பதுவயதான ஒரு விதவை ஸ்திரீ சமீபத்தில் அறுபது வயதுள்ள ஓர் இஞ்சினீரை விவாகஞ் செய்துகொண்டாள். இவ்விருவருக்கும் வாலிபத்திலிருந்தே காதல் நிகழ்ந்து வந்ததாம். ஆனால் பெண்ணின் பெற்றோர் இதனை அறியவில்லை. வேறொருவருக்கு இவளை விவாகஞ் செய்து கொடுத்து விட்டனர். தற்போது விவாகஞ் செய்து கொண்ட இஞ்சினீர், மேற்படி பெண்ணையே விவாகஞ் செய்துகொள்வ தென்று தீர்மானித்து வேறொருவரையும் விவாகஞ் செய்து கொள்ளாம லிருந்தார். கடைசியில் அவருடைய விருப்பம் நிறைவேறியது.

* * *

### இளைஞர்களின் முயற்சி

சூரத்தில், ஸ்ரீமான் பாரக்ஜி பகீர்பாய் என்ற ஐம்பத்தைந்து வயதுள்ள ஒருவயோதிகர் ஆறு வயதுள்ள ஒரு பெண்ணை விவாகஞ் செய்து கொள்ளப் போவதாகத் தீர்மானித்திருந்தார். இந்த மாதம் பதினோராந்தேதி விவாகம் நடைபெறுவதாக இருந்தது. இந்தப் பெண்ணின் தகப்பனார், தன் பெண்ணை மேற்படி வயோதிகருக்குக் கொடுப்பதற்காக எண்ணாயிரம் ரூபா பெற்றுக் கொண்டாரென்று தெரிகிறது. சூரத்திலுள்ள இளைஞர்கள் இந்த விவாகத்தை நிறுத்த முயற்சி செய்தார்கள். இவர்களுடைய உதவியைக் கொண்டு, பெண்ணின் மாமன், மேற்படி விவாகத்தை நிறுத்தத் தடையுத்தரவு பிறப்பிக்குமாறு ஜில்லா நீதிபதியிடம் மனுச் செய்து கொண்டார். அப்படியே, விவாகத்தை நிறுத்தி வைக்குமாறு நீதிபதி உத்தரவு செய்திருக்கிறார்.

* * *

### கொலையும் தற்கொலையும்

முஸம்மத் பெசியா என்ற முப்பது வயதுள்ள ஒரு ஸ்திரீ, தன்னுடைய இரண்டு வயதும் நான்கு வயதுமுடைய இரண்டு குழந்தைகளைக் கொன்றதாகவும், தான் தற்கொலை செய்துகொள்ள முயற்சி செய்ததாகவும் குற்றஞ் சாட்டப்பட்டு அலகாபாத் ஜில்லா நீதிபதியால் தீவாந்தர தண்டனை விதிக்கப்பட்டாள். மேற்படி ஸ்திரீ, வறுமையினாலும், வீட்டுச்சச்சரவுகளினாலும் வெறுப்படைந்து போய், தன்னிரு குழந்தைகளுடன் ஒரு கிணற்றில் விழுந்து விட்டாள். குழந்தைகள் இறந்துபோக, இவள் மாத்திரம் மீட்கப்பட்டாள். தனது கணவனும், மாமியாரும் உணவு கொடாமல் தன்னைப் பெரிதும் துன்புறுத்தினார்க ளென்றும், மூன்று நாட்கள் வரை இருவரும் தன்னை ஓர் அறையில் பூட்டி வைத்திருந்த பிறகு வெளியே துரத்தி விட்டார்க ளென்றும், தான் தன் தகப்பனார் வீட்டுக்குச் சென்று கொண்டிருந்த போது, தன்னை வழியில் தன் மாமியார் வந்து தடுத்துக் கிணற்றில் தள்ளி விட்டாளென்றும் முஸம்மத் பெசியா வழக்கின் போது கூறினாள். நீதிபதி, இவளுக்குத் தீவாந்தர தண்டனை விதிப்பதாகத் தீர்ப்புக் கூறுகையில், இந்த ஸ்திரீ, தன் கணவன், மாமியார் இவர்களுடைய கொடுமையைப் பொறுக்கமாட்டாமலேயே தற்கொலை செய்து கொள்ள முயற்சி செய்தாளென்றும், ஆதலின் அரசாங்கத்தார் இவள் விஷயத்தில் கருணைகாட்ட வேண்டுமென்றும் கூறினார்.

* * *

### வேலியே பயிரைமேய்ந்தால்?

பஞ்சாப் மாகாணத்திலுள்ள குஜரான் வாலாவிலுள்ள ஒரு போலீஸ் கான்ஸ்டேபில், தான் வேலைபார்த்துக் கொண்டிருந்த போலீஸ் ஸ்டேஷன் அதிகாரிகளின் உதவியைக் கொண்டு கொள்ளையடித்த வரலாறொன்று இப்பொழுது வெளியாயிருக்கிறது. அது வருமாறு:—இவ்வருஷம் அக்டோபர் மாதம் 29-ந் தேதி குஜரான்வாலாவில் விடியற் காலை மூன்று மணிக்கு தீன நாத் என்றொருவரும் அவருடன் வேறு மூவரும், ஸ்டேஷனுக்கு வண்டியில் செல்ல வேண்டுமென்ற நோக்கத்துடன் வண்டிகள் நிற்கு மிடத்தை நோக்கிச் சென்றார்கள். அவ்விடம் சென்று பார்க்க, அங்கே ஒரு வண்டியும் காணப்படவில்லை. எனவே, நால்வரும் சுமார் ஒன்றரை மைல் தூரமுள்ள குஜரான்வாலா ஸ்டேஷனுக்கு நடந்து செல்லத் தீர்மானித்தார்கள். இப்படி சுமார் இருபதுகஜ தூரம் சென்றார்கள். அப்பொழுது காகிஜாருங்காகிஷர்ட்டும் அணிந்து கொண்டு, தலையில் ஒன்றுமின்றி ஒரு தடியுடன் ஒருவன், இவர்கள் பின்னால் வந்து, வேகமாக முன்னே சென்றுவிட்டான். மேற்படி நால்வரிடத்திலும் ஒரு விளக்கு இருந்தது. ஸ்டேஷனுக்கு இன்னும் நாற்பது அல்லது ஐம்பதுகெஜ தூரம் செல்ல வேண்டி யிருந்தது. அப்பொழுது நான்கு கள்ளர்கள் இவர்களைச் சந்தித்தார்கள். இக்கள்ளரில் முதலிற் சென்ற காகிஷர்ட்டுடன் கூடியவனும் இருந்தான். தீனநாத் என்பவருடைய தலையில் ஐம்பது அல்லது அறுபது ரூபாய் பெறுமான அணிமணிகள் அடங்கிய ஒரு பெட்டி இருந்தது. இந்தப் பெட்டியைக் காகி ஷர்ட்டணிந்து கொண்டிருந்தவன் பிடித்திழுத்தான். தீனநாத் அதை எளிதில் விடவில்லை. இதற்குள் கள்ளர்களில் ஒருவன், தீனநாத்தைத் தடியால் ஓங்கி ஓர் அடி அடித்தான். மற்றொருவன் தீனநாத்தின் மேல் இன்னோரடியும் கொடுக்க, அவர் மூர்ச்சித்து விழுந்தார். காகி ஷர்ட்டணிந்து கொண்டிருந்தவன், பெட்டியை எடுத்துக்கொண்டு ஓட்டையில் தன்னுடைய தடியையும்தலைப்பாகையையும்மறந்துவிட்டுச் சென்றுவிட்டான். இதை அமர்சந்த் என்பவர் எடுத்துக்கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்கு எல்லாரும் சென்றார்கள். அப்பொழுது அங்கே, காகி ஷர்ட்டணிந்து கொண்டிருந்த குற்றவாளி, போலீஸ் சப்இன்ஸ்பெக்டருடன் பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். பிறகு, குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கவோ, களவுபோன சாமான்களைத் தேடவோ எவ்வளவோ முயற்சி செய்யப்பட்டும் பயனில்லாமற் போயிற்று. பிறகு, காகிஷர்ட்டணிந்து கொண்டு வந்த குற்றவாளியாகிய கான்ஸ்டேபில் மூன்று வருஷக் கடுங்காவல் தண்டனை யடைந்தான்.

* * *

### வீரத்தின் மாண்பு

இங்கிலாந்திலுள்ள லீசெஸ்டர் என்ற இடத்திற் கருகாமையில் ஸ்ரீமான் விக்டர் பாண்ட் என்ற ஒரு மாஜி இராணுவ உத்தியோகஸ்தர் பயிர்த்தொழில் வேலை செய்து கொண்டிருந்தார். ஒரு நாள் காலை, ஒரு ஸ்திரீ, குதிரை மீதேறிக் கொண்டு அவ்வழியாக வந்தாள். இவள் ஸ்ரீமதி லிலியன் ரிச்செட் என்ற ஓர் அமெரிக்க மாது. மிகுந்த பணக்காரி. அவ்வூரிலுள்ள ஒரு பணக்காரக் குடும்பத்தினரின் விருந்தினராக வந்திருந்தாள். இவள் முன்கூறிய விதம் குதிரை மீதேறிச் சென்று கொண்டிருந்தபோது, பக்கத்தில் ஒருமோடார் சைகிள் வேகமாக வந்தது. அதன்சப்தத்தைக் கேட்டு குதிரை மிரண்டுபோய் விட்டது. தன்னால் கூடிய மட்டும் அதனை அடக்க முயன்றாள். முடியவில்லை. கண்ணை மூடிக்கொண்டு, அஃது எங்கே போய் விழுகிறதோ விழட்டும் என்று இருந்து விட்டாள். இச்சமயத்தில் திடீரென்று ஒரு கூச்சல் கேட்டது. ஸ்ரீமான் பாண்ட், ரோட்டின் நடுவில் நின்றுகொண்டு குதிரையைத் தடுத்து அதன் கழுத்தின் மீதேறிக் கொண்டு அடக்கினார். குதிரையும் நின்று விட்டது. இதைக் கண்டு ஸ்ரீமதி ரிச்செட் ஆச்சரியப்பட்டு ஸ்ரீமான் பாண்டை விவாகம் செய்து கொள்வதாகத் தீர்மானித்தாள்.

* * *

### குழந்தை மணத்தின் கொடுமை

வங்காளத்திலுள்ள அலிபூர் டிப்டி மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் ஸ்ரீமதி சமத்ரகீம் தாசி என்ற பதினாறு வயதுள்ள பெண்ணொருத்தி தனது கணவன், தன் சக்களத்தியின் தகப்பனார் ஆகிய இருவர்மீதும் கொண்டுவந்த வழக்கில் தான் தன் கணவனின் பந்துக்கள் வீட்டில் பட்ட கொடுமையைப் பற்றிப் பின்வருமாறு கூறினாள் :—

நான் ஆறு வயதாயிருந்தபோது, மகேந்திரன் என்பவருக்கு விவாகஞ் செய்து கொடுக்கப்பட்டேன். அது முதல் நான் என் மாமனார் வீட்டிலேயே வசித்துக் கொண்டு வந்தேன். எனக்குப் பதினைந்து வயதானதும், என் மாமனார் என்னிடத்தில் தவறாக நடந்து கொண்ட காரணத்திற்காக என் தாயார் வீட்டுக்குச்சென்று விட்டேன். இதைக் கண்டு என் மாமனாருக்குக் கோபம் வந்து விட்டது. எனவே தமது மகனுக்கு, சாத்கைன் என்ற இரண்டாவது குற்றவாளியின் பெண்ணை, விவாகஞ் செய்து கொடுப்பித்தார். பிறகு, மகேந்திரன் என்ற என் கணவரும் சாத்கைன் என்பாரும், என்னை அழைத்துக் கொண்டு வருவதற்காக என் தாயார் வீட்டுக்கு வந்தார்கள். என் தாயாரும் என்னை அனுப்புவதற்குச் சம்மதித்து என்னுடன் சிறிது தூரம் வந்தாள். ஆனால் மேற்படி இருவரும், தாங்களே இனி அழைத்துச் செல்வதாகச் சமாதானங் கூறி என் தாயாரைத் திருப்பி அனுப்பிவிட்டார்கள். பிறகு, நாங்கள் மூவரும் கௌர்ஷெட் என்ற இடத்திற்குச் சென்றோம். அங்கே, மகேந்திரன், என்னைச் சாத்கைனுடன் விட்டு விட்டுச் சென்று விட்டான். சாத்கைனோ, மகேந்திரனுக்குக்காகச் சிறிது நேரம் காத்துக் கொண்டிருப்பதாக நடித்து, பிறகு வேறொரு வழியாக என்னை அழைத்துக் கொண்டு சென்றான். ஒரு குளத் தருகாமையில் சென்றபோது, சாத்கைன் என்னிடம் தவறாக நடந்து கொள்ளத் தொடங்கினான். உடனே நான் கூச்சலிட்டேன். அருகிலிருந்தவர் இதனைக் கேட்டு ஓடி வந்து என்னை மீட்டனர்.

## மணித்திரள்

லண்டனில் மட்டும் சுமார் 1700 பாங்கிகள் இருக்கின்றன.

* * *

ஈடா என்ற ஓர் அரச குடும்பத்துப் பெண் சமீபத்தில் ஒரு குடும்பத்தில் வேலை யாளாய் அமர்ந்திருக்கிறாள்.

* * *

நடனக் கச்சேரிகள் நடைபெறுவதற்கு அநுகூலமான மோடார் வண்டிகள் இது காலை செய்யப்பட்டு இங்கிலாந்தில் ஓடுகின்றனவாம்.

* * *

இங்கிலாந்திலுள்ள ஸ்திரீகள் தங்களை அழகு படுத்திக் கொள்வதற்காக மட்டும் சென்ற வருஷம் 40000000 பவுன் செலவழிக்கின்றனராம்.

* * *

திமிங்கில வேட்டைக்காகப் படகுகளாக மாறக்கூடிய ஆகாய விமானங்களை உபயோகிக்க இப்பொழுது முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன.

* * *

இங்கிலாந்திலுள்ள ட்ரேடன்மார்க்கெட்டில் நான்கு வருஷங்களுக்குமுன் ஒரு புறா காணாமற்போயிற்று. சமீபத்தில் அந்தப் புறா மீண்டும் தன் பழைய இருப்பிடத்திற்கு வந்து சேர்ந்ததாம்.

* * *

கேம்பிரிட்ஜ் சர்வகலா சாலையைச் சேர்ந்த ஓர் ஆசிரியர், கண்ணாடிச் சுவர்கள், கண்ணாடிக் கதவுகள், கண்ணாடிப் பலகை முதலியவைகளாலாய ஒரு வீட்டைக் கட்ட உத்தேசித் திருக்கிறாராம்.

* * *

ஸ்ரீமான் ஜான் ஓர்ம் என்ற ஓர் ஐரோப்பியர் தமது எண்பதாவது வயதில், மோடார் சைகிள் விட்டுக்கொண்டிருக்கிறாராம். இவர் தினந்தோறும் முப்பது மைல் தூரம் பிரயாணஞ் செய்கிறாராம்.

* * *

கண்ணாடிமுன் நின்று அழகு படுத்திக் கொள்வதற்காக மட்டும், மேனாட்டு ஸ்திரீகள், தங்கள் ஆயுளில் ஏழாயிரம் மணி நேரத்தைச் செலவழிக்கிறார்க ளென்று சொல்லப்படுகிறது.

* * *

சைரில் டிக்ஸன் என்ற பதினேழு மாதமுள்ள ஒரு குழந்தை வாயால் ஊது குழல் போல் வாசிக்கத் தொடங்குகிறது. இதற்குப் பேசவோ, நடக்கவோ தெரியாவிட்டாலும், காலை முதல் இரவுவரை வாயால் ஊதிக் கொண்டிருக்கிறது,

* * *

கொலராடோ மாகாணத்திலுள்ள ஒரு பாங்கி சமீபத்தில் அரை பென்னி செக் ஒன்றுக்குப் பணங் கொடுத்தது. 1896-ம் வருஷம் மே மாதம் 15-ந் தேதியிட்ட இந்தச் செக்குக்கு முப்பத்து மூன்று ஆண்டுகள் கழித்து இப்பொழுதே பணங் கொடுக்கப்பட்டது.

* * *

ருஷ்ய அதிகாரிகள் ஞாயிற்றுக் கிழமை விடுமுறையே இல்லை யென்று உத்தரவு பிறப்பித்திருக்கிறார்களாம். ருஷ்ய அரசாங்கத்தார் வெளியிட்டிருக்கும் புதிய காலண்டர்படி ஒரு மாதம், வாரத்திற்கு ஐந்து நாட்கள் வீதம் ஆறு வாரங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறதென்று தெரிகிறது.

எண்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ் சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில் லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணி வோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவா ளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1929ஹு டிசம்பர்மீ 18உ

## அறிக்கைக்குப் பின்

இந்தியாவின் அரசியல் வானம் தற்போது கறுத்திருப்பதைப் போல் எப்பொழுதும் கருமை யடைந்தது கிடையாது. இராஜப் பிரதிநிதியின் அறிக்கை இக்கரு வானத்தில் ஒரு மின்னலென்ச் சிலர் கருதினராயினும், அது பலருடைய பார்வையை மழுங்கச் செய்து விட்டது. லார்ட் இர்வின் அறிக்கை வெளி வந்தாலும் வந்தது; எத்தனை ஊகங்கள்! எத்தனை கண்டனங்கள்!

ஒருசாரார், அவ் வறிக்கையினால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கே தீமை விளைந்துவிட்டதாக ஓலமிடுகிறார். இன்னொரு சாரார் அதனால், இந்தியாவின் குறைகளெல்லாம் தீர்ந்து விட்டன வென்று பறை சாற்றுகிறார். இவை யெல்லாம் எற்றுக்கு?

இராஜப் பிரதிநிதி அறிக்கையால் விளைந்த நன்மையோ ஒன்றுமில்லை. அதற்கு மாறாக, அது நம்மவரிற் பலருடைய கடமையை மறந்து விடும்படி செய்திருக்கிறது. லார்ட் இர்வின் அறிக்கை வெளி வருவதற்கு முன்னே 'அடுத்த ஆண்டுத் தொடக்கத்திலிருந்து, தேசம், சாத்துவிகப் போரில் தீவிரமாக இறங்கவேண்டும்' என்ற எண்ணம் ஏறக்குறைய எல்லாரிடமும் இருந்தது இப்பொழுதோ தேசத்தின் கவனம் வேறு துறைகளில் சென்று கொண்டுவருகிறது. இது வருந்தத்தக்கதென்று மட்டும் கூறுவோம்.

இந்நிலையில் இம்மாதம் இருபத்து மூன்றாந் தேதி, லார்ட் இர்வின் மகாத்மாகாந்தியையும், பண்டித மோதிலால் நேருவையும் டெல்லியில் சந்தித்துப் பேசப் போகிறார் என்ற செய்தி நாட்டாரிடைப் பலவித ஐயப்பாடுகளைக் கிளப்பிவிட் டிருக்கிறது. இச்செய்தியை இதுகாறும் எவரும் மறுக்கவில்லை.

காங்கரஸ் வாரத் தொடக்கத்தில், லார்ட் இர்வின் தலைவர்களை அழைத்துப் பேசப் போவது குறிப்பிடத்தக்கது. லாகூர் காங்கரஸ் சிறிது பணிவான தீர்மானங்களைச் செய்வதற்கு இந்தச் சந்திப்பு உபயோகப் படுத்தப்படலாம். ஆனால் தலைவர்கள் அறிக்கையில் குறிப்பிட்ட மூன்று நிபந்தனைகளை நிறைவேற்றுவதற்குக் கொடுக்கப்பட்ட காலவரையை இன்னும் வளர்த்து வருவது தேசத்தின் நாடியைச் சோதிப்பது போல்வதாகும். காந்தியடிகளும் பண்டித நேருவும் இதற்கு இடங் கொடுக்கமாட்டார்களென்று கருதுகிறோம்.

இந்தியத் தலைவர்களைத் திருப்தி செய்விக்க வேண்டு மென்னுங் கருத்து லார்ட் இர்வினுக்கும் ஸ்ரீமான் வெட்ஜ்வுட் பென்னுக்கும் உண்மையிலேயே இருக்கலாம். ஆனால் அவர், தம் எண்ணத்தைச் செயலில் கொணரும் வரை, நாட்டில் திருப்தி ஏற்படாது.

இந்தியாவில் நீண்டகாலம் உழைத்து உபகாரச் சம்பளம் பெற்று ஓய்வுடன் இது காலை இங்கிலாந்திலிருக்கும் மாஜி கவர்னர்களும், மாஜி உத்தியோகஸ்தர்களும் லார்ட் ராதர் மீயருக்குச் சொந்தமான பத்திரிகைகளுக்குத் துணைநின்று இந்தியாவுக்கு விரோதமாகப் பலமான கிளர்ச்சி செய்து வருகிறார்கள். பிரிட்டிஷ் பார்லிமெண்டில் லிபரல் கட்சியினரும் கன்ஸர் வேடிவ் கட்சியினரும் மாண்டேகு கொள்கையினின்றும் ஓர் அங்குலம்கூட முன் செல்லக் கூடாதவாறு தொழிற்கட்சி அரசாங்கத்தைத் தகைந்து நிற்கின்றனர். தொழிற்கட்சியினருக் குள்ளேயே, இந்தியாவைப் பற்றிக் கருத்து வேற்றுமைகள் தோன்றியுள்ளன. இந்தியாவிலுள்ள ஐரோப்பியர், இராஜப்பிரதிநிதியின் அறிக்கைக்கு விபரீதப் பொருள் கொண்டு இடர்ப்படுகிறார். சர்வகட்சி மகாநாட்டில் பிரதிநிதித்துவம் வேண்டுமென்பதை விரும்பி இப்பொழுதே பல புதிய சங்கங்களும் முளைத்து விட்டன. இந்நிலையில் நமது தலைவர்கள் கடமை யென்ன?

ஸர் தேஜ்பகதூர் சப்ரூ போன்றாருடைய பொறுமை உபதேசத்திற்கு இணங்கி, பிரிட்டிஷ் இராஜதந்திர வலையில் சிக்கிக் கொள்ளாம லிருக்குமாறு தலைவர்களுக்கு எச்சரிக்கை செய்கிறோம். இச்சமயத்தில், எட்டாண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்த காந்தி-ரெடிங் சந்திப்பை நேயர்களுக்கு நினைவூட்டுகிறோம். அக்காலத்தில், தேசத்தாருக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தைப் போல், இப்பொழுது காந்தி—இர்வின் சம்பாஷணையினால் ஏமாற்றம் நேருமேயாயின் அதற்காக நாம் பெரிதும் வருந்துவோம். ஆனால் காந்தியடிகள் எவருக்கும் எளிதில் இணங்குபவரல்லர். ஸ்ரீமான் பென்னர் பிராக்வேக்குச் சென்றவாரம் அவர் விடுத்த செய்தியிலிருந்து அவருடைய உறுதி புலனாகும். அவர் உறுதியில், உண்மையில், உள்ளத் தூய்மையில் தேசத்தாருக்கு முழு நம்பிக்கை இருக்கிறது. இதைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தாரும், இந்திய அரசாங்கத்தாரும், ஓர்எச்சரிக்கையாகக் கொள்ளல்வேண்டும். அடிகள் கோலும் வழியையே, லாகூர் காங்கிரஸ் பின்பற்றி நடக்கும் என்று நம்புகிறோம்.

## இடியேறு

### மீண்டும் உயிர்ப்பு

வங்காளத்தில் இரட்டையாட்சியை உயிர்ப்பிக்க லார்ட் லிட்டன் செய்த முயற்சிகளுக்கு அளவில்லை. அவர் முயற்சி, இரட்டை யாட்சிக்கு எவ்வித உயிரையோ உணர்ச்சியையோ அளிக்கவில்லை. இப்பொழுது, ஸர் ஸ்டான்லி ஜாக்ஸன் மீண்டும் அவர் வேலையைத் தொடங்கியிருக்கிறார். ஸ்ரீமான் குமார சிபிசேகரே சுவராய், கான் பகதூர் குலாம் முகை தீன் பரூக்கி, ஜனாப் க்வாஜா நாஜி மித்தீன் ஆகிய மூன்று பேரையும் அவர் மந்திரிகளாக நியமித்திருப்பதாக ஒரு செய்தி கூறுகிறது. மாண்டேகு-செம்ஸ்பர்ட் சீர்திருத்தத்தின் கீழ், மந்திரிகளை நியமிக்கும் அதிகாரம் கவர்னர்களுக்கு இருக்கிறதென்பதை நாம் அங்கீகரிக்கிறோம். அரசாங்க அங்கத்தினர்கள், நியமனம் செய்யப்பட்ட அங்கத்தினர்கள் முதலியவர்களுடைய துணை கொண்டு, அவர், எத்தகைய மந்திரி சபையையும் நியமித்து, சிறிது காலமாவது அம்மந்திரி சபையை அதிகாரத்தி லிருத்தி வைக்க அவருக்கு வழி உண்டு. இவ்வழியைப் பின்பற்றியே, ஸர் ஸ்டான்லி ஜாக்ஸன் புதிய மந்திரிகளைச் சிருஷ்டித்திருப்பாரானால், அவர் தவறானவழியிற் சென்றவரே யாவார். இதற்கு முன்னர், வங்காள சட்ட சபை அங்கத்தினர்களுக்குள் பலவித கட்சி வேற்றுமைகள் இருந்த போதிலும், மந்திரி சபையை வீழ்த்தும் விஷயத்தில் எல்லாரும் ஒற்றுமையாகவே நடந்து கொண்டார். ஒருகால், வங்காள மாகாண காங்கிரஸ் கமிட்டியில் இது காலை ஏற்பட்டுள்ள கட்சிப் பிணக்குகளால், தமது மந்திரிசபையை ஆதரிக்க ஒரு கூட்டம் ஏற்படும் என்று ஸர் ஸ்டான்லி ஜாக்ஸன் கருதியிருக்கலாம். ஆனால், சமீபத்தில் ஸ்ரீமான் சென்குப்தா கூறியதைப் போல், தேசியவாதிகளுக்குள் எத்தகைய மனமாற்றங்கள் ஏற்படினும், அரசாங்கத்தாரை எதிர்க்கும் விஷயத்தில் அனைவரும் ஒற்றுமைப் பட்டவரே யென்பதை வங்காள கவர்னர் விரைவில் அறிந்துகொள்ளுதல் நலம்.

### சட்டசபையில் கதர்

அரசாங்க இலாகாக்களில் கதரையே உபயோகப்படுத்த வேண்டு மென்று ஐக்கிய மாகாண சட்டசபையில் ஒரு தீர்மானம் நிறைவேறி யிருக்கிறது. இது போற்றத் தகுந்தது. இங்ஙனமே எல்லா மாகாணச் சட்டசபைகளும் தீர்மானங்கள் நிறைவேற்றி வைத்தால் நன்று யிருக்கும். ஆனால் தீர்மானங்களைக் காகித அளவில் நிறைவேற்றி வைப்பதால் பயனில்லை. அதை நடைமுறையில் கொணருமாறு நிருவாக அதிகாரிகளை வற்புறுத்த வேண்டும். கதரை உபயோகிக்குமாறு பல நகரசபைகள் தீர்மானம் நிறைவேற்றி யிருந்த போதிலும், அதைச் செயலில் கொணராம லிருப்பதற்கு நிருவாக அதிகாரிகள் பலவித சாக்குப் போக்குகளைச் சொல்லி வருகிறார்கள். மாகாண அரசாங்கங்களும் இங்ஙனம் நடந்துகொள்ளுதல் கூடாது.

### சென்னையில் லார்ட் இர்வின்

லார்ட் இர்வின், சென்னையில் மூன்று நாள் தங்கிச் சென்று விட்டார். தமக்களிக்கப்பட்ட உபசாரப் பத்திரங்களுக்குப் பதில் அளிப்பதிலும், அரசாங்க அதிகாரிகளால் பொறுக்கி எடுக்கப்பட்ட சிலருக்குப் பேட்டியளிப்பதிலும், கிண்டி குதிரைப் பந்தயத்தைச் சென்று பார்வை யிடுவதிலும், அரசாங்க ஆதரவில் நடைபெறும் பல ஸ்தாபனங்களைக் காண்பதிலும் அவர் இம் மூன்று நாட்களையும் கழித்தார். ஆனால் இவைகள் மூலமாகச் சென்னையின் நிலையை அவர் எவ்வளவு தூரம் அறிந்து கொண்டாரோ நாமறியோம். சென்னையில், ஏழைகள் வசிக்கும் சில இடங்களுக்கும், சென்னைக்கு அருகாமையிலுள்ள சில கிராமங்களுக்கும் அதிகாரிகள் அவரை அழைத்துச் சென்று அவைகளை அவருக்குக் [illegible] திருக்கும். சென்னை டிராம் வண்டிகளில் ஒரு முறை லார்ட் இர்வின் ஏறிச் சிறிது தூரம் சென்று பார்த்திருப்பாரானால் அவருக்கு புதிய அநுபவம் ஏற்பட்டிருக்கும் என்பது திண்ணம். லார்ட் இர்வின் விஜயத்தால் சென்னை அரசாங்கத்துக்கு ஏற்பட்டுள்ள செலவு எவ்வளவு என்பதையும், ஜனங்களுக்கு உண்டான நன்மை என்ன வென்பதையும் சென்னை அரசாங்கத்தார் ஓர் அறிக்கை மூலமாக வெளியிடுவாரா?

### பாராட்டுகிறோம்

ஓர் அம்சத்தில் லார்ட் இர்வினை நாம் பாராட்டாம லிருக்க முடியவில்லை. சென்னையிலுள்ள தாழ்ந்த வகுப்பு பிரதிநிதிகள் அவருக்கு ஓர் உபசாரப் பத்திரம் அளித்தார்கள். அதற்கு அவர் விடையிறுத்த போது, மகாத்மா காந்தி போன்ற பொதுஜனத் தலைவர்களின் முயற்சியால், தாழ்ந்த வகுப்பார் முன்னேற்ற மடைந்து வருகின்றனர் என்று குறிப்பிட்டார். பொதுஜனத் தலைவர்களின் செயலைப் பகிரங்கமாகப் பாராட்டிப் பேசுவது, தங்கள் கௌரவத்திற்குக் குறைவென்று அதிகாரிகள் நினைத்திருந்த காலமும் உண்டு. ஆனால் லார்ட் இர்வின், அதை மறந்து பேசியதைக் குறித்து அவரைப் பாராட்டுகிறோம்.

### அரசியற் கைதிகள்

இவ்வாண்டு டிசம்பர் மாத இறுதிக்குள் ஐக்கிய மாகாணத்திலுள்ள எல்லா அரசியற் கைதிகளையும் விடுதலை செய்ய வேண்டு மென்று ஐக்கிய மாகாண சட்டசபையில் ஒரு தீர்மானம் சமீபத்தில் நிறைவேற்றப் பட்டிருக்கிறது. இத்தீர்மானத்தை எதிர்த்துப் பேசிய அரசாங்க அங்கத்தினர், 'அரசியற் கைதிகள்' என்றால் இன்னாரென்று விளங்கக் கூறப்படவில்லை யென்று கூறினார். இஃது ஆச்சரியமா யிருக்கிறது. அரசியற் கைதிகளை விடுதலை செய்வதன் மூலமாக லார்ட் இர்வின், ஸ்ரீமான் வெட்ஜ்வுட் பென் இவர்களுடைய நன்னோக்கம் புலனாதல் வேண்டுமென்று ஸ்ரீமான் சிந்தாமணி கூறியது கவனிக்கத் தக்கது. அரசியற் கைதிகளை விடுதலை செய்யவேண்டு மென்பது, வெறும் அரசியல் கிளர்ச்சி யல்ல வென்பதை, ஐக்கிய மாகாண சட்டசபையில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் மூலமாகவேனும் பிரிட்டிஷ் தொழிற்கட்சி அரசாங்கத்தார் உணர்ந்துகொள்வரோ?

### "இந்தியாவின் அடிமைத் தனம்" நூலின் வழக்கு

அமெரிக்காவைச் சேர்ந்த டாக்டர் சந்தர்லந்து எழுதிய "இந்தியாவின் அடிமைத் தனம்" என்னும் நூலை அரசாங்கத்தார் பறிமுதல் செய்தது குறித்து ஸ்ரீமான் எஸ். கே. தாஸ் கல்கத்தா ஹைக்கோர்ட்டில் மனுச் செய்துகொண்டார். இதன் சம்பந்தமாக 16-12-29-ல் விசாரணை நடைபெற்றது. தீர்ப்புக் கூறுவது நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது.



## முதலாளிகளும் தொழிலாளரும்

### ஒரு மத்தியஸ்தரின் முடிவு

சென்ற வாரத்து "யங்இந்தியா" பத்திரிகையில் காந்தியடிகள் எழுதியுள்ள ஒரு கட்டுரையின் சாரம் வருமாறு:—

ஆமதாபாத் முதலாளிகள் சங்கத்தாருக்கும் ஆமதாபாத் தொழிலாளர் சங்கத்தாருக்கும் இடையே யிருந்த தகராறுகளைப்பற்றி ஒருவித முடிவு செய்ய, மேற்படி இரு சாராராலும் நியமிக்கப்பட்ட நிரந்தர மத்தியஸ்த போர்டார், திவான் பகதூர் கிருஷ்ணலால் மோகன்லால் ஜாவேரி என்பாரை மத்தியஸ்தராக நியமித்தனர். இவர், மிகுந்த ஆராய்ச்சி செய்து தமது முடிவை வெளியிட்டிருக்கிறார். "சாதாரண வாழ்க்கையை நடத்தக் கூடிய கூலி தனக்குக் கிடைக்கவில்லையானால், அங்ஙனம் வாழ்வதற்கு வேண்டிய கூலியைத் தனக்குக் கொடுக்கும் படி முதலாளியைத் தொழிலாளி கேட்கலாம்" என்ற தத்துவத்தை இவர் எடுத்துக் காட்டியிருக்கிறார். சாதாரண வாழ்க்கையை நடத்தப் போதிய கூலி தனக்கு வேண்டுமென்று தொழிலாளர் நெடு நாட்களாகக் கேட்டுக் கொண்டிருக்கின்றனர்; முதலாளிகளும் இதை மறுத்து வருகிறார்கள். தொழிலாளர்களுக்கு இந்த உரிமை உண்டென்று மத்தியஸ்தர் ஒத்துக் கொண்டிருக்கிறார். தொழிலாளர்களின் மாத வரும்படி நாற்பது ரூபாய்க்கு மேலில்லை யென்றும், அவர்களுடைய செலவு ஐம்பது ரூபாய்க்கு அதிகமாகிறதென்றும்இவர் அங்கீகரிக்கிறார். 1923-ம் வருஷத்தில், தொழிலாளர்களுடைய சம்பளத்தில் நூற்றுக்குப் பதினைந்து வீதம் குறைக்கப்பட்டது. அதைத் திரும்பவும் கொடுக்க வேண்டுமென்பதே தொழிலாளர்களின் கோரிக்கை. சாதாரண வாழ்க்கையை நடத்துவதற்குரிய கூலியை ஆமதாபாத் தொழிலாளர்கள் பெறவில்லை யென்று மேற்படி மத்தியஸ்தர் கூறியிருக்கும் போது, குறைக்கப்பட்ட கூலி ஏன் மீண்டும் கொடுக்கப்படவில்லை யென்பது தெரியவில்லை. குறைக்கப்பட்ட கூலியைத் திரும்பக்கொடுத்தால்கூட மாதம் ஐம்பது ரூபாய்க்கு மேலாகாது. சொல்லளவில் தாம் சரியெனக் கண்ட முடிவை, மத்தியஸ்தர் ஏன் செயலில் கொண்டுவர முன்வரவில்லையோ தெரியவில்லை. ஒன்று, அவருடைய முடிவிலேயே அவருக்குச் சந்தேகம் ஏற்பட்டிருக்கலாம். அல்லது முதலாளிகள், 1923-ம் வருஷத்தில் கூலியைக் குறைத்த செயலைக் கண்டிக்கச் சிறிது தயங்கி இருக்கலாம். மில்தொழில், யுத்தகாலத்தி லிருந்ததைப் போல் 1923-ம் வருஷத்தில் அவ்வளவு இலாபகரமாயில்லை யென்பதை ஒத்துக்கொள்ளலாம். ஆனால் அப்பொழுதும், மில் முதலாளிகளுக்குக் குறைந்த இலாபமே ஏற்பட்டதன்றி நஷ்டமோ, முதலில் குறைவோ ஏற்படவில்லை. சாதாரண வாழ்க்கையைத் தொழிலாளர்கள் நடத்தும் பொருட்டு என்ன கூலி கொடுக்க வேண்டுமோ அதைவிட அதிகமான கூலியை அவர்கள் பெற்ற காலத்திலும், முதலாளிகளுக்கு நஷ்டம் ஏற்பட்டகாலத்திலுமே கூலியைக் குறைக்கவேண்டியது நியாயம். ஆனால் ஆமதாபாத் தொழிலாளர்கள் மத்தியஸ்தத்திற்குக் கட்டுப்பட் டிருக்கிறார்களாதலால், மத்தியஸ்தரின் முடிவை அவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டும். சாதாரண வாழ்க்கையை நடத்தப் போதிய கூலியும், தக்க வீட்டு வசதிகள் முதலியனவும் தங்களுக்குக் கொடுக்கப்படாத தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் அமைதி இராது. ஆனால், வேலை நிறுத்தங்களே இல்லாமல் முதலாளிகளும் தொழிலாளர்களும் மத்தியஸ்தத்திற்குக் கட்டுப்படுவதா யிருந்தால் அது பெரிய இலாபகாமானதாகும். தொழிலாளர்கள், அவர்கள் கோரியதைப் பெறாவிட்டாலும், திவான் பகதூர் ஜாவேரிலாலின் முயற்சிகளை நான் பாராட்டுகிறேன்.

### கல்கத்தா இராஜத்துவேஷ வழக்கு

தென் கல்கத்தாவில் அரசியல் கைதிகள் நாள் கொண்டாடப்பட்டதன் சம்பந்தமாக ஸ்ரீமான் சுபாஷ் சந்திர போஸ் முதலியோர் மீது இராஜத்துவேஷம், சதியாலோசனை முதலிய வற்றிற்காகக் கொண்டு வரப்பட்டிருக்கும் வழக்கில் இரண்டு எதிரிகள் தவிர ஏனையோர் ஸ்டேட்மெண்டு கொடுக்க மறுத்து விட்டனர். விசாரணை 6-1-1930க்கு ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது. புனிதமாகக் கருதப்படும் தமது கிர்பானைத் திருப்பிக் கொடுக்குமாறு ஸ்ரீபிரேம்சிங் கேட்டது மறுக்கப்பட்டு விட்டது.

## மூன்றாவது வகுப்புப் பிரயாணம்

### சகிக்கக் கூடாத நிலைமை

சென்ற வாரத்து "யங்இந்தியா" பத்திரிகையில் ஸ்ரீமதி மீராபாய் பின்வருமாறு எழுதுகிறார்.—

சென்ற நவம்பர் மாதம் இருபதாந் தேதி நான் அலகாபாத்திலிருந்து பாட்னாவுக்கு மூன்றாவது வகுப்பில் பிரயாணஞ் செய்து கொண்டிருந்தேன். ரெயில் வண்டி மிகச் சிறியது. வழக்கம் போல் அஃது அசுத்தமாயிருந்தது. ஆனால் படுத்துக் கொள்வதற்கு அதில் சிறிது இடமும் இருந்தது. எனவே என் கம்பளத்தை விரித்துக் கொண்டு நித்திரை செய்யத்தொடங்கிவிட்டேன். சிறிது நேரத்திற் கெல்லாம் என்னை யாரோ தட்டி எழுப்புவது போலிருந்தது. நான் எழுந்தேன். வண்டியில் ஜனங்கள் வந்து ஏறிக் கொண்டிருந்தனர். நான் படுத்திருந்த இடத்தில் இரண்டு ஸ்திரீகள் உட்காரக் காத்துக் கொண்டிருந்தார்கள். எனவே, என் கம்பளத்தை எடுத்து விட்டுப் படிப்பதற்கும் எழுதுவதற்கும் மாத்திரம் இடம் வைத்துக்கொண்டு என் வேலையைச் செய்யத்தொடங்கினேன். உடனே என் பக்கத்திலிருந்த ஸ்திரீ "எங்கிருந்து வருகிறீர்கள்?" என்று என்னைக் கேட்டார். "அலகாபாத்திலிருந்து பாட்னாவுக்குப்போகிறேன்" என்று பதில் கூறினேன். நான் கதர் தரித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து "நீங்கள் எங்கேவசிக்கிறீர்கள்?" என்று மறுபடியும் அவர் கேட்டார். "குஜராத்திலுள்ள காந்தி ஆசிரமத்தில்" என்று நான்விடை யிறுத்தேன். உடனே பல கேள்விகள் கேட்கத் தலைப்பட்டார். எதிரே உட்கார்ந்து கொண்டிருந்த ஓர் ஆடவரும், இவருடன் சேர்ந்து கேள்விகள் கேட்க ஆரம்பித்தார். நான் ஏதேனும் எழுதலாமென்று முயற்சி செய்தேன். ஆனால் ஸ்திரீயோ விடுவதாயில்லை. கடைசியில் அவருக்கு உறக்கம் வந்துவிட்டது. தன்னைக் காந்தி ஆசிரமத்திற்கு அழைத்துச் செல்லுமாறு கேட்டுக் கொண்டு நித்திரை செய்யத் தொடங்கி விட்டாள். எதிரிலிருந்த மனிதனும் சிறிது நேரம் பேசிவிட்டு உறங்கி விட்டார். பிறகு என் எழுத்து வேலையைத் தொடங்கினேன். ஆனால் அதற்குள் வண்டியில் ஜன நெருக்கம் மிக அதிகமாகி விட்டது. இப்படி யிருக்கையில் அடுத்த ஸ்டேஷன் வந்தது. வண்டி நின்றது. ஏற்கனவே நிரம்பியிருந்த எங்கள் வண்டியில் ஏராளமாக ஜனங்கள் ஏறத் தொடங்கினார்கள். வண்டியின் கதவு திறக்கக்கூடாதபடி அவ்வளவு நெருக்கமாக ஜனங்கள் இருந்தார்கள். ஆனால் ஜனங்கள் ஜன்னல்கள் வழியாக மூட்டைகளை உள்ளே தள்ளித்தாங்களும் ஏறிக்கொண்டார்கள். சுமார் ஐந்து நிமிஷநேரம் வரை ஏற்பட்ட கூச்சலுக்கும்குழப்பத்திற்கும் ஓர் அளவில்லை. இவ்வளவுக்கும் ரெயில்வே உத்தியோகஸ்தர் ஒருவராவது அங்கு வந்து எட்டிப் பார்க்கவில்லை.

#### சொல்லமுடியாத நெருக்கம்

வண்டி செல்லத் தொடங்கியது. ஜன்னல்கள் வழியாக உள்ளே வந்து சேர்ந்தவர்கள், உள்ளே இருந்தவர்களுடன் எப்படியாவது சமாதானஞ் செய்துகொள்ள வேண்டியவர்களானார்கள். ஹிந்துக்களுக்கு இயல்பாக, சமயத்திற்குத் தக்கபடி தங்களைச் சரிப்படுத்திக் கொண்டு போகும் சுபாவமும் சாந்த குணமும் இருப்பதால், ஒருவருக்கொருவர் சமாதானத்துடன் இருக்கமுடிந்தது. சிலர் மூட்டைகள் மீது உட்கார்ந்தனர்; சிலர் ஏற்கனவே யுள்ள இடத்தில் நெருக்கி உட்கார்ந்தனர். இன்னும் சிலர் கீழே உட்கார்ந்து உறக்கம் கொள்ளத் தொடங்கினர். எங்கும் இடமே அகப்படாதவர்கள் நின்றுகொண்டே வந்தார்கள். எங்களுடைய வண்டியில் பன்னிரண்டு சோல்ஜர்கள் உட்காரலாம் என்று பலகை ஒட்டப்பட்டிருந்தது. அதில் இப்பொழுது 34 ஆண்களும், இரண்டு ஆண்குழந்தைகளும், நான்கு ஸ்திரீகளும், இரண்டு கைக் குழந்தைகளும் இருந்தார்கள்! வண்டி சென்று கொண்டிருக்கும்போது, மூச்சு விடுவதற்குப் போதுமான காற்று இருந்தது. ஆனால் எங்கேனும் ஒரு ஸ்டேஷனில் வண்டி நின்று விட்டதேயானால் காற்று நின்றுவிடும். ஜன்னல்கள் அருகே உட்கார்ந்து கொண்டிருந்தவர்கள், வெளியிலிருந்து ஜனங்கள் வந்து ஏறாம லிருக்கும்பொருட்டு ஜன்னல்கதவுகளை மூடிவிட்டார்கள். தாங்கமுடியாத உஷ்ணம் ஏற்பட்டுவிட்டது. நின்றுகொண் டிருந்தவரிற் சிலர் மூர்ச்சையாகும் நிலையிலிருந்தனர். எனவே, நின்று கொண்டிருந்தவரும் மெதுவாக நெருக்கிக் கொண்டு உட்கார்ந்து கொண்டனர். இப்படிப் பல மணிநேரம் நாங்கள் பிரயாணஞ் செய்தோம். இரவு வந்து விட்டது. அதிக குளிர். என்னிடத்தில் சில தின்பண்டங்கள் இருந்தபோதிலும் என்னால் தின்பதற்கு முடியவில்லை. போதிய வெளிச்ச மின்மையால் படிப்பதற்கும் முடியவில்லை. பிரயாண முடிவை, அதிக கஷ்டத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டியிருந்தது.

#### பாட்னா அடைதல்

கடைசியில் பாட்னா வந்து சேர்ந்தோம். வண்டியிலிருந்து, சாமான்களுடன் இறங்குவது பிரமப் பிரயத்தனமாகி விட்டது. என் [illegible] னாவில் இறங்கினர். அவர் எனக்கு உதவி செய்திராவிட்டால், வண்டி புறப்படுவதற்கு முன்னர், என் சாமான்களை இறக்க முடிந்திருக்குமோ வென்பது சந்தேகமா யிருந்தது. சென்ற நான்கு வருஷங்களாக இந்தியாவில் ஆயிரக் கணக்கான மைல்தூரம் மூன்றாவது வகுப்பில் பிரயாணஞ் செய்திருக்கிறேன். இதுமாதிரியான சம்பவங்கள் மிகச் சாதாரணம் என்பது என் அநுபவம். நன்றாக ஆளப்படும் ஒரு தேசத்தில் இத்தகைய நிலைமை இராது.

மகாத்மா காந்தியின் குறிப்பு:— நான் சென்ற பன்னிரண்டு மாத காலமாக மூன்றாவது வகுப்பிலேயே பிரயாணஞ் செய்து வருகிறேன். மூன்றாவது வகுப்பு வண்டியில் ஜன நெருக்கம் இருக்கிறதென்பதைப் பற்றி 1915-ம் வருஷம் முதல் 1917-ம் வருஷம் வரையில் எனக்கு அநுபவம் ஏற்பட்டிருந்தது. என் அநுபவங்களை அப்பொழுது பத்திரிகைகளில் வெளியிட் டிருக்கிறேன். நான் பத்திரிகைகளில் என் அநுபவங்களை வெளியிட்ட பிறகு, மூன்றாவது வகுப்பு வண்டிகளில் முன்போல் அவ்வளவு அதிக ஜனநெருக்கம் இருப்பதில்லை எனக் கருதி யிருந்தேன். ஆனால், நான் கருதியிருந்தது தவறென்று தெரிகிறது. ஐரோப்பியரல்லாத, அல்லது ஐரோப்பிய முறையை அநுசரியாதவரைப் பொறுத்தமட்டில், ரெயில்வே கம்பெனியார் கவனஞ் செலுத்துவதில்லை. ஐரோப்பியர்களுக்கும், ஐரோப்பிய உடைகளுடை யிருக்கும் இந்தியர்களுக்கும் மூன்றாவது வகுப்பு வண்டியில் தக்க சௌகரியம் செய்து கொடுக்கப்பட் டிருக்கிறது. 1925-26-ம் வருஷத்தில் 601778000 பேர் மூன்றாவது வகுப்புகளில் பிரயாணஞ் செய்திருக்கின்றனர். இவர், 347645000 ரூபா கட்டணமாகச் செலுத்தி யிருக்கின்றனர். எனவே, இவர்கள் வண்டிகளில் அடைக்கப்படுவதுடன் திருப்தியடைய வேண்டியவர்களே! முதல் இரண்டாவது வகுப்புப் பிரயாணிகளுக்கு என்னென்ன தேவைகள் உண்டோ அதே தேவைகள் மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளுக்கும் உண்டு. அதற்கான கட்டணத்தையும் பின்னவர் செலுத்துகின்றனர். ஆயினும், பார்சல்களை ஒரு சாமான் வண்டியில் அடைத்து நிரப்புவதைப் போல் மூன்றாவது குப்புப் பிரயாணிகள் நடத்தப் படுகிறார்கள். ஸ்ரீமதி மீராபாய் தமது நிறத்தையும் பிறப்பையும் வெளிப்படுத்திக் கொண்டிருப்பாரானால், அவருக்கு இந்த அநுபவம் ஏற்பட்டிராது. அப்படி ஏற்பட்டிருந்தாலும் அவருடைய குறைகள் காது கொடுத்துக் கேட்கப்பட் டிருக்கும். 1925-26-ம் வருஷத்து ரெயில்வேக்களிற் பிரயாணஞ் செய்தவர் எண்ணிக்கை, வருமானம் முதலிய பின்வரும் கணக்குகளை நேயர்கள் ஊன்றிக் கவனிப்பார்களாக.

| பிரயாணிகள் | வருமானம் ரூபா |
|---|---|
| முதல் வகுப்பு 1169000 | 12042000 |
| இரண்டாவது வகுப்பு 10487000 | 18942000 |
| இண்டர் வகுப்பு 14009000 | 15961000 |
| மூன்றாவது வகுப்பு 601778000 | 347645000 |

### ஞானஞ்சன் நியோகி வழக்கு

"புரட்சி வங்காளம்" என்று கல்கத்தா 'ஆல்பர்ட் மண்டப'த்தில் விரிவுரை நிகழ்த்தியதற்காகவும், அதைதலைப்பில் பிரசுரம் வெளியிட்டதற்காகவும் ஞானஞ்சன் நியோகி மீது கொண்டு வரப்பட்ட இராஜத்துவேஷ வழக்கில் கவிவீந்திர நாத தாகூரும், ஸ்ரீமான் சரத்சந்திர சாட்டர்ஜியும் எதிர் தரப்பு சாக்ஷிகளாக விசாரிக்கப்படுவாரென்றும், விசாரணை 7-12-29-க்கு ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறதென்றும் ஒருசெய்தி கூறுகிறது.

### காங்கிரஸ் தொண்டர் கைதியானர்

கல்கத்தாவைச் சேர்ந்த, மைமென்சிங் காங்கிரஸ் தொண்டரும், அரசியல் சம்பந்தமாகச் சிறை சென்று விடுதலையடைந்தவருமான ஸ்ரீ சித்திரஞ்சன் தாஸ் ஐ. பி. கோ. 385-வது பிரிவுப் படி 12-12-29-ல் கைது செய்யப்பட்டு அவருடைய வீட்டில் சோதினை போடப்பட்டது. அவர் ஜாமீனிலும் விடப்படவில்லை.

## தொண்டர் ஸ்தாபனம்

### பண்டித ஜவஹரிலால் நேருவின் முயற்சி

சென்ற வாரத்து "யங் இந்தியா" பத்திரிகையில், மகாத்மா காந்தி எழுதியுள்ள ஒரு கட்டுரையின் சாரம் வருமாறு:— நான் ஐக்கியமாகாணத்தில் சுற்றுப்பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது அம்மாகாணத்தில்தேசியத்தொண்டர் ஸ்தாபனமொன்று ஸ்தாபிக்கப் பணம் வேண்டுமென்று பண்டித ஜவஹரிலால் நேரு கூறினர். இது நல்ல யோசனையேயாகும். இதற்காக ரூ. 12036.15 9 வசூல் செய்யப்பட்டது. இது போதுமான தொகை அல்லாவிடினும், காரியத்தைத் தொடங்குவதற்கு இது போதுமானதே. தொண்டர்ஸ்தாபனம் ஏற்படுத்த வேண்டுமென்ற யோசனை புதிதல்ல. 1920-ம் ஆண்டு முதல் இந்த யோசனை தேசத்தின் முன் நிற்கிறது. ஆனால் பண்டித ஜவஹரிலால் இதற்கு ஒரு வடிவங் கொடுத்தார். தங்களுடைய ஒழிவு நேரங்களில் தொண்டு செய்யக் கூடிய தொண்டர்களை நாம் நம்பி இருக்கும் வரை தேசிய வேலை துரிதமாக நடைபெறாது. நிரந்தரமான வேலைக்கு, நிரந்தரமாக, முழு நேரத்தையும் செலவழிக்கக் கூடிய தொண்டர்கள் தேவை. ஆதலின், ஒவ்வொரு மாகாணமும், தனக்குத்தானே பணம் வசூலித்துத் தன்னுடைய தேவைகளுக்குத் தகுந்தபடி தொண்டர்ஸ்தாபனங்களை அமைத்துக் கொள்ளுதல் நல்லது. பழக்கப்பட்ட நிரந்தரமான ஊழியர்கள் இல்லாமையால் வேலைகள் தடைபடுவதை அறிந்த பண்டித ஜவஹரிலால் பணந்திரட்டலானார். ஆதலின்,இவ்வமைப்புக்கு வேண்டிய திட்டங்கள் தயாரிக்கப் படுமென்றும், மனுக்கள் ஏற்றுக் கொள்ளப் படுமென்றும் நம்புகிறேன். தீண்டாமை விலக்கு, ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை, அந்நியத்துணி பகிஷ்காரம், பூரணமது விலக்கு, நாட்டுக் கல்வி முதலியவற்றிற் காக நிரந்தரமான தொண்டர்கள் தேவை. இந்தியாவில் எழுநூறுயிரம் கிராமங்களிருக்கின்றன. ஒவ்வொரு கிராமத்திற்கும் குறைந்தது ஒரு தொண்டராவது இருக்கவேண்டு மென்பது நமது நோக்கமா யிருக்கவேண்டும். அகில இந்திய நூல் நூற்போர் சங்கத்தைத் தவிர்த்து, இப்பொழுது ஒரு ஜில்லாவிற்கு ஒரு தொண்டர்கூட இல்லை. இப்பொழுது ஏற்படப் போகும் ஐக்கியமாகாண தொண்டர் ஸ்தாபனத்தை எல்லா மாகாணங்களும் கவனித்துக்கொண்டு வரும். இந்த ஸ்தாபனம் தேசிய மயமாகவும், நிரந்தரமாகவும் இருக்க வேண்டுமானால் அஃது அரசியல் கட்சி வாதங்களுக்குப் புறம்பானதா யிருக்கவேண்டும். காங்கிரஸின் உத்தியோகஸ்தர்கள் வருஷந்தோறும் மாறுதல் அடையும்போது, இந்தத் தொண்டர்கள் விலக்கப்படமாட்டார்கள் என்று இவர்களுக்கு நாம் உறுதி மொழி கொடுக்க வேண்டும். இதற்குச் சரியான அமைப்புள்ள ஸ்தாபனம் இன்றியமையாதது.

### தீண்டாமை விலக்கு

ஜபல் பூரில் உள்ள எட்டு கோயில்களும், பம்பாயிலுள்ள ஒரு கோயிலும், தீண்டாதாருக் கென்று திறந்து விடப்பட்டிருக்கின்றன. காலத்தில் செய்த இந்தச் செயலுக்காக மேற்படி கோயில்களின் டிரஸ்டிகளும், பிறரும் பாராட்டு தற்குரியர். இவ்வண்ணம் கோயில்களைத் திறந்து விட்டதனால் இவர்கள், ஹிந்து மதத்திற்கும், இந்தியாவிற்கும் பெருந் தொண்டு செய்தவர்கள் ஆவார்கள்; பொறுமையை இழந்து நிற்பதன் அறிகுறிகளைக் காட்டத் தொடங்கிய தீண்டாதவர்களுக்குப் புதிய நம்பிக்கையைக் கொடுத்தவர்களாவார்கள். தீண்டப்படாதவர்களும் ஹிந்துக்களைப் போலவே சுதந்திரக் காற்றை நுகரவேண்டும். நமது ஜனத் தொகையில் ஐந்தில் ஒரு பங்கினரைத் தாழ்ந்த-தொடாத-நெருங்காத-பாராத நிலையில் வைத்திருக்கும் வரையில், ஹிந்துக்களாகிய நாம் சுதந்திரத்தை எதிர்பார்க்க முடியாது. "யங் இந்தியா"

### ஸ்ரீசைலேந்திர நாத்ராய் கைதி யானர்

சென்ற அக்டோபர் மாதத்தில் கல்கத்தாவைச் சேர்ந்த [illegible] நடந்த [illegible] மகாநாட்டில் [illegible] ஸ்ரீ சைலேந்திர நாத்ராய் 10-12-29-ல் கல்கத்தா போலீஸாரால் கைது செய்யப்பட்டார். [illegible] ஜாமீனில் விடுதலை யடைந்தார். 6-1-1930-க்கு [illegible] அவருக்கு உத்திரவிடப் பட்டிருக்கிறது.

## இத்தலியின் முன்னேற்றம்

### பாசிஸ்டு கட்சியார் சாதித்த தென்ன?

"லண்டன் டைம்ஸ்" பத்திரிகையின் உரோமாபுரி நிருபர் அப்பத்திரிகைக்கு 26-10-29-ந் தேதியிட்டு எழுதியுள்ள ஒரு கட்டுரையின் சாரம் வருமாறு :—

மனித தேகத்திலுள்ள இரத்த நாளங்கள் முதலியன ஏழு வருஷத்திற் கொருமுறை மாறுதலடைந்து வருகின்றனவென்று கூறப்படுவதுண்டு. அதுபோல் இத்தலியின் நிலைமையும் சென்ற ஏழு ஆண்டுகளில் அதிக மாறுதலடைந் திருக்கிறது. 1922-ம் வருஷம் அக்டோபர் மாதம் 26-ந் தேதி பாசிஸ்ட் கட்சியார் உரோமாபுரி மீது படையெடுத்துச் சென்று அரசாங்க ஆதிக்கத்தை* ஏற்றுக் கொண்டனர். இதன் பயனாக, இத்தலியின் பொருளாதார, அரசியல் அமைப்புகள்யாவும் ஒரு மாற்றத்தை யடைந் திருக்கின்றன. ஏழு வருஷங்களுக்கு முன் இத்தலியில் சுற்றுப் பிரயாணஞ் செய்தவர், இப்பொழுது இத்தலிக்கு வந்து பிரயாணஞ் செய்வாராகில், அந்நாட்டில் எத்தகைய மாறுதல் ஏற்பட் டிருக்கிறதென்பது நன்கு புலப்படும். கப்பல் வியாபாரம் அதிகமாகச் செழித்தோங்கி வளர்ந்திருக்கிறது. ஏற்றுமதி இறக்குமதிக் கணக்குகளைப் பார்த்தால் இந்த உண்மை நன்கு புலனாகும். இப்பொழுது, கப்பற் பிரயாணஞ் செய்ய வேண்டுமென்ற எண்ணம் ஜனங்களுக்கு அதிகமாக உண்டாயிருக்கிறது. இத்தலி தேசத்து முக்கிய நகரங்கள் பல அழகு படுத்தப்பட்டு விசாலமாக்கப் படுகின்றன. ஆங்காங்கு புதிய நகரங்கள் நடப்படுகின்றன. மிகக் கேவல நிலையிலிருந்த பாதைகள் சீர்திருத்தப் படுகின்றன. மோடார் வண்டிகள் செல்வதற்கென்று தனியான பாதைகள் அமைக்கப் படுகின்றன. ரெயில்வேக்கள் மிகத்திறம்பட ஓடுகின்றன. ஆகாய விமானங்கள் ஆங்காங்குப் பறந்து செல்கின்றன.

* * *

பாசிஸ்ட் கட்சியார் நிருவாகத்தை ஏற்றுக் கொண்ட பிறகு, சாகுபடி செய்யக் கூடியவாறு நிலங்களை அபிவிருத்தி செய்ததே மிக முக்கியமானதாகும். சுமார் நாற்பது லட்சம் ஏகரா நிலங்கள் சாகுபடிசெய்யக் கூடியநிலைக்குக் கொண்டு வரப்பட்டிருக்கின்றன. இன்னும் பத்து லட்சம் ஏகரா நிலங்கள் இதே ஸ்திதிக்குக் கொண்டு வரப்படும் என்று சொல்லப்படுகிறது. நிலங்களை மட்டும் சாகுபடி செய்யக் கூடிய தன்மைக்குக்கொண்டுவந்து நிறுத்திவிடவில்லை. பாசன வசதிகளும் ஏற்படுத்தப்பட்டு வருகின்றன. குடி நீர்வசதிகள்செய்து கொடுப்பதற்காக ஆங்காங்கு நீர்த்தேக்கங்கள் கட்டிக் கொடுக்கப்படுகின்றன. விவசாயப் பண்ணைகள் ஏற்படுத்தப்பட்டு அவைகள் ஒவ்வொன்றுக்கும் மின்சார சக்தி மூலமாகப் போக்குவரவு சாதனங்கள் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. இந்த அபிவிருத்தி வேலைகளின் பயனாக, லட்சக்கணக்கான தொழிலாளர்கள் பிழைக்கிறார்கள். மேற்குறிப்பிட்ட விவசாய அபிவிருத்தியின் பயனாக, தேசத்தின் தானிய விளைவு மிக அபிவிருத்தி யடையும் என்று நம்பப்படுகிறது.

* * *

இத்தாலியின் தென் புறத்திலுள்ளவர், வடபுறத்தாரால் முன்னர் அவமதிக்கப்பட்டு வந்தனர். இப்பொழுது அவைகளெல்லாம் மறைந்து விட்டன. வடபாகமும் தென் பாகமும் ஒரே நோக்குடன் அரசாங்கத்தாரால் கவனிக்கப்பட்டு வருகின்றன. இதனால் ஜனங்களுக்குள் ஒருவித ஒற்றுமை உணர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. தவிர, போப்புக்கும், இத்தாலிய மன்னருக்கும் ஏற்பட்ட சமாசம் ஜனங்களுக்கு ஒருவித ஒற்றுமை உணர்ச்சியையும் தேசாபிமான உணர்ச்சியையும் உண்டுபண்ணி யிருக்கிறது.

* * *

பாசிஸ்ட் கட்சியின் தலைவரான சிஞர் முசோலினி, இத்தாலியின் அரசியல் நிருவாக முறையிலும் பல மாறுதல்களை ஏற்படுத்தி யிருக்கிறார். பிரதம மந்திரியின் உத்தியோகத்தையும் அவருக்குள்ள அதிகாரங்களையும் குறிப்பிட்டு 1925-ம் வருஷம் டிசம்பர் மாதம் ஒரு சட்டம் இயற்றப்பட்டது. மந்திரி மார்கள் அவரவர்களால் நிருவகிக்கப்படும் இலாகாக்களுக்கு அரசருக்கே பொறுப்பாளிகளானபோதிலும், அவர்கள் அநுஷ்டிக்கும் கொள்கைகளுக்குப் பிரதம மந்திரிக்குப் பொறுப்பாளிகள். பிரதம மந்திரி, அரசருடைய அங்கீகாரத்தைப் பெற்று, மந்திரிப் பதவிகளைக் கலைத்து விடவோ, அல்லது புதிய மந்திரிப் பதவிகளைச் சிருஷ்டிக்கவோ கூடும். மந்திரி சபையார் என்ன விதமான கொள்கையை அநுசரிக்க வேண்டுமென்பதைப் பிரதம மந்திரியே நிர்ணயிக்க வேண்டும். மந்திரி சபை அநுஷ்டிக்க வேண்டிய கொள்கைகளைப் பற்றிப் பிரதம மந்திரியே அரசருடன் கலந்து பேசலாம். சுமார் ஒரு வருஷத்திற்கு முன்னர் "பாசிஸ்ட் கிராண்ட் கௌன்சில்" என்ற ஒரு சபை ஸ்தாபிக்கப் பட்டது. முக்கியமான சில விஷயங்களில் இந்தச் சபையின் அபிப்பிராயங்களைக் கேட்க வேண்டிய அவசியம் சட்டத்தின் மூலம் விதிக்கப்பட் டிருக்கிறது.

* * *

இத்தலியில் பாசிஸ்ட் கட்சியின் பலம் எவ்வளவு இருக்கிற தென்பதை இப்பொழுது கூற முடியாது. பாசிஸ்ட் கட்சியில் இப்பொது, 10,20,000 பேர் அங்கத்தினராயிருக்கின்றனர். மாணுக்கர் முதலியோரையும் சேர்த்துக் கொண்டால் 20,00,000 பேர் ஏற்படலாம். ஜனங்களில் நூற்றுக்குத் தொண்ணூறுபேர் பாசிஸ்ட் ஆட்சிமுறையை ஆதரிக்கின்றனர் என்றே கூறவேண்டும்.



சென்னை மாகாணத்திலுள்ள வாலிபர்கள் பழைய சம்பிரதாயப்படி விவாகஞ்செய்து கொள்ள விரும்புகிறார்களென்பதையும், சாரதாச் சட்டத்தை வெறுக்கிறார்களென்பதையும் காண்பிக்கும் பொருட்டுச் சென்னை மாகாண வாலிபர் சநாதன தர்ம மகாநாடொன்று அடுத்த ஜனவரிமாத மத்தியில் சென்னை வால்டாக்ஸ் தியேட்டரில் நடைபெறுமென்று அறிவிக்கப்படுகிறது.

## இந்தியாவுக்குக் குடியேற்ற நாட்டந்தஸ்து

### பிரிட்டிஷாரின் மனப்பான்மை

'பயோனீர்' பத்திரிகையின் மாஜி ஆசிரியரா யிருந்த ஸ்ரீமான் எப். டப்ளியு. வில்சன் 'நியுஇந்தியா' பத்திரிகையில் எழுதும் ஒரு கட்டுரையின் சாரம் வருமாறு :—

தங்கள் கோரிக்கைகளுக்கு எதிராகச் செய்யப்படும் கிளர்ச்சிகள் அறியாமையினாலும் துவேஷ புத்தியினாலும் ஏற்பட்டனவன்று என்பதை இந்தியர்கள் அறிந்து கொள்ளவேண்டுவது அவசியமாகும். வேண்டுமென்றே வன்மபுத்தியைக் கொண்டு இவை ஏற்பட்டனவாகும். இங்கிலாந்தில் ஒரு கூட்டத்தார் இருக்கின்றனர். இந்தியாவைப்பற்றி ஒரு பொய்ச் செய்தியைப் பரப்ப ஒரு சந்தர்ப்பம் அகப்பட்டாலும்கூட அதை இக்கூட்டத்தார் விடுவதில்லை. மாஜி கவர்னர்களும், உபகாரச் சம்பளத்துடன் விலகிய உத்தியோகஸ்தர்களும் இந்தியாவுக்கு விரோதமாகச் செய்யும் இந்தக் காரியங்களைக் கண்டு, நியாயபுத்தியுள்ள இங்கிலீஷ்காரர் வெறுப்புக் கொள்ளாமலிருக்க முடியாது. இதற்கு ஓர் உதாரணம் காட்டுகிறேன். சமீபத்தில் இராஜப் பிரதிநிதியால் வெளியிடப்பட்ட அறிக்கையைப்பற்றி கனம் ஆகாகான் 'லண்டன் டைம்ஸ்' பத்திரிகையில் ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதில் 1917-ம்வருஷத்தில் ஸ்ரீமான் மாண்டேகு அறிக்கையை வெளியிட்டபோது, அவ்வறிக்கையின் கருத்தை பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களும், இந்தியா அரசாங்க நிருவாக அங்கத்தினர்களும் முன்னரே அறிந்திருந்தார்களென்றும், அக்காலத்தில் ஸ்ரீ மாண்டேகுவின் அறிக்கை அவசியமான தென்று கருதினார்களென்றும் கூறியிருந்தார். ஆனால் ஸர் மைக்கேல் ஓட்வியர் இதற்குப்பதில் எழுதியபோது, மாண்டேகு அறிக்கை வெளியாகும் வரை தமக்குத் தெரியா தென்றும், மற்ற மாகாணாதிபதிகளும் இதை அறிய மாட்டார்களென்றும் குறிப்பிட்டிருக்கிறார். பெயரளவில் இஃதுண்மையாயிருக்கலாம். ஆனால், மாண்டேகு அறிக்கை சம்பந்தமாக மாகாணாதிபதிகளுக்கும் இந்தியா அரசாங்கத்திற்கும் எவ்விதக் கடிதப்போக்கு வரத்தும் நடைபெறவில்லை என்ற அபிப்பிராயத்தைபோ, அல்லது இந்தியாவின் அரசியல் நிலையைக் கவனியாமலே அவ்வறிக்கை வெளியிடப்பட்டதென்ற அபிப்பிராயத்தையோ பிரபலப்படுத்தவேண்டுமென்ற கருத்து அவருக்கிருக்குமானால் அது தவறாகும். ஸர் மைக்கேல் ஓட்வியர், தம்முடைய அபிப்பிராயத்தை ஸ்ரீமான் மாண்டேகு தெரிந்து கொள்ள வில்லையென்று வருத்தப்படுவாரானால் ஒரு லெப்டினெண்டு கவர்னருக்கும் இந்தியா மந்திரிக்கும் உள்ள சம்பந்தத்தை அவர் குறைத்துப் பேசியவரேயாவர். ஸ்ரீமான் மாண்டேகு இந்தியா மந்திரியா யிருந்தபோது, அவருடைய தயவைச் சம்பாதிப்பதில் உத்தியோகஸ்தர்கள் கண்ணுங்கருத்துமாயிருந்தார்கள். தவிர, இந்த உத்தியோகஸ்தர்களை ஸ்ரீ மாண்டேகு நன்றாக அறிந்து கொண்டிருந்தார்.

### பிரிட்டிஷாரின் அறியாமை

இந்தியாவின் துரதிருஷ்டவசமாக, பிரிட்டிஷ் பொது ஜனங்கள் இந்தியாவைப்பற்றி மிகச்சாதாரண அறிவையேபெற்றிருக்கிறார்கள். விஷயங்களை நன்றாகத் தெரிந்து கொண்டிருக்க வேண்டிய பத்திரிகைகள் கூட தினந்தோறும் பல தவறான அபிப்பிராயங்களை வெளியிடுகின்றன. அறியாமையால் வெளியிடப்படும் அபிப்பிராயங்களை மன்னித்து விடலாம். ஆனால் 'நியூஸ் டேட்ஸ்மான்' போன்றபத்திரிகைகள் வாரந்தோறும் விஷத்தைக் கக்குவதன் பொருளென்னை? சமீபத்தில் வெளியான இப்பத்திரிகையின் இத ழொன்றில் பின்வரும் குறிப்பு காணப்படுகிறது :—

"குடியேற்ற நாட்டந்தஸ்து என்ற சொற்றொடருக்கு இந்தியாவைப் பொறுத்த மட்டில் பொருளே இல்லை. ஹிந்துக்கள், முகம் மதியர்கள், பாதி சுதந்திரமுள்ள சுதேசசமஸ்தானங்கள் முதலியன அடங்கிய இந்தியாவென்ற பிரதேசம், ஆஸ்திரேலியா, கானடா, நியுஜிலந்து போன்ற அரசியல் முறையைப் பெற முடியாது. உலக ஐக்கியம் என்பது எப்படி தூர சாத்தியமோ அப்படியே இந்தியா குடியேற்ற நாட்டந்தஸ்தை அடைவதும் தூர சாத்தியமாகும். இப்பொழுது மாத்திரமல்ல, இன்னும் நூறுவருடத்திற்கு இந்தியா குடியேற்ற நாட்டந்தஸ்து பெறுவதென்பது முடியாத காரியம். ஐர்லாந்துக்குச் சுயராஜ்யம் கொடுக்கும் விஷயத்தில் எப்படி அல்ஸ்டர் மாகாணம் விரோதமாயிருந்ததோ அப்படியே இந்தியாவிலும் ஆயிரம் ஆல்ஸ்டர்கள் இருக்கின்றன. முகம்மதியர்கள், ஹிந்துக்களால் ஆட்சி செய்யப்பட விரும்புவார்களா? கல்கத்தா, லாகூர், பம்பாய் முதலிய இடங்களின் ஜனநாயகக் கொள்கைகளால் சுதேச சமஸ்தான மன்னர்கள் ஆட்சி செய்யப்படவிரும்புவார்களா? இந்தக்கேள்விகளைக் கேட்கும் போதே இவைகளுக்கு விடைகள் கிடைத்துவிடுகின்றன. இந்தியாவைப் பொறுத்தமட்டில் "குடியேற்றநாட்டந்தஸ்து" என்ற சொற்றொடரானது ஓர் ஆபாசமேயாகும். ஏமாற்றுவதற்காக வேண்டுமானால் இதனைப்பிரயோகிக்கலாம்."

இந்தக் கட்டுரைக்கு "லார்ட் இர்வின் தவறு" என்று மகுடமிடப் பட்டிருக்கிறது. இந்தக் கட்டுரையிலேயே, லார்ட் இர்வின் சிறக்கேவலமான இராஜப்பிரதிநிதி என்று அழைக்கப்பட்டிருக்கிறார். பிரிட்டிஷ் பொது ஜனங்களின் மனதைக் கலக்க, இந்திய விரோதிகள் எவ்வளவு தூரம் செல்லத் தயாராயிருக்கிறார்கள் என்பதைக் காட்டுவதற்காகவே, மேற்படி கட்டுரையின் ஒரு பாகத்தை எடுத்துக் காட்டினேன். இத்தகைய பிரசாரங்கள் செய்யப்படும்போது, இந்தியா சும்மா கைகட்டிக் கொண்டிருக்கக் கூடாது. பிரிட்டிஷ் அரசியலில், இந்தியா ஒரு கட்சிப் பிரச்சினையாகி விட்டது. ஆதலின், இந்தியாவைப்பற்றிய சரியான வரலாற்றைப் பிரிட்டிஷ் பொது ஜனங்களுக்கு எடுத்துக் காட்டவேண்டும். பிரிட்டிஷ் வாக்காளர் முன்னிலையில் விஷயங்களைத் தெளிவாக எடுத்துச் சொன்னால் அவர் நியாயமாக நடந்து கொள்ளக்கூடியவர் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. இதன் பொருட்டுச் சரியான பிரசாரம் செய்யப் படவேண்டும். பிரசார விஷயத்தில் இந்தியா மிகக்குறைவான முயற்சிகளைச் செய்து கொண்டிருக்கும் போது, பிரிட்டிஷ் பொது ஜனங்கள் கவலையீனமாயிருக்கிறார்கள் என்று சொல்வதில் பயனில்லை. இந்தியர்களிற் சிறந்தவர் அவ்வப்பொழுது இங்கிலாந்து சென்று வருவதால் உண்டாகும் நற்பயன்களை நான் அறியாமலில்லை. ஆனால் இவர்கள் கட்டுப்பட்ட ஒரு நிலையிலேயே வேலை செய்ய வேண்டியிருக்கிறது. இவர்களுக்கு விரோதமாக எல்லாப் பத்திரிகைகளும் பிரசாரம் செய்யத் தொடங்கி விடுகின்றன. இந்தியாவில் நடைபெறும் ஒவ்வொரு கலகமும் ஒவ்வொரு குற்றமும், இங்கிலாந்து பத்திரிகைகளுக்குத் தந்திகள் மூலம் அறிவிக்கப்படுகின்றன. இந்தியாவின் விஷயங்களைப்பற்றி உண்மையான நிகழ்ச்சிகளை முக்கியமான பத்திரிகைகளில் காண்பது அரிதாகவே இருக்கிறது.

### காரியத்தில் முனைந்து இறங்கவேண்டும்

இங்கிலாந்தில் பிரசாரம் செய்யப்பட வேண்டுமென்பதை இந்தியாவிலுள்ள தலைவர்கள் ஒத்துக்கொள்கிறார்கள். ஆனால் அதைச் செயலில் கொணர எவரும் முயற்சி செய்வதில்லை. இதனைச் செயலில் கொணர்வதற்கு இடையே பல கஷ்டங்கள் இருக்கின்றன வென்பதையும், பணச்செலவு அதிகம் நேருகிற தென்பதையும், தன்னலத் தியாகம் செய்ய வேண்டி யிருக்கிற தென்பதையும் நான் அறியாமலில்லை. இந்தியாவுக்குக் குடியேற்றநாட் டந்தஸ்து கொடுப்பது பிரிட்டிஷ் பார்லிமெண்டு வசமே இருக்கிற தென்பதை மறுப்பதற்கில்லை. ஆனால், தன்னுடைய கட்சியைச் சரியாக எடுத்துச் சொல்வதில் இந்தியாவே போதிய கவனஞ் செலுத்தாதிருக்கும் போது, பார்லிமெண்டு, பல உள் நாட்டு விஷயங்களுடன் இந்தியாவின் விஷயத்தையும் கவனிக்குமென்று நாம் எப்படி எதிர்பார்க்க முடியும்? ஆதலின் இவ்விஷயத்தில், இந்தியாவிலுள்ள அரசியல் கட்சியார்அனைவரும் ஒன்று சேர்ந்து தகுந்த முயற்சிகள் எடுத்துக்கொள்வர் என்று எதிர்பார்க்கிறேன். இந்தியாவில் ஒற்றுமை இருப்பதாக லண்டனில் தெரிந்தால் அதனால் அற்புதமான வெற்றி உண்டாகும். இந்தியா குடியேற்றநாட்டந்தஸ்து பெறுவது, அஃது இங்கிலாந்தில் செய்யும் பிரசாரத்தைப் பொறுத்திருக்கிறது.





## இல்லற வாழ்வில் அமைதி தருவது எது?

### சங்கீதமே

பம்பாயில் சமீபத்தில் நடைபெற்ற இரண்டாவது ஸ்திரீகள் சங்கீத மகாநாட்டில் தலைமை வகித்த ஸ்ரீமதி ரூபி டையாப்ஜி அவர்களின் முன்னுரையின் சுருக்கம் வருமாறு :—

உலகத்திலுள்ள ஜனங்களைப் பலவித மதங்கள் பிரித்து வைக்கின்றன ; ஒரு சமூகத்தை மற்றொரு சமூகத்தினின்று பிரித்து வைக்கப் பலவித பாஷைகள் இருக்கின்றன. நம்முடைய பாரத தேசத்திலேயே வட நாட்டாருக்குத் தென்னாட்டார் பேசும் பாஷை ஒன்று கூடத் தெரிவதில்லை. ஆனால், உலகத்திலுள்ள அனைவரும் சங்கீதத்தை அறிந்து கொள்கின்றனர். சங்கீதத்தைக் கேட்டு மனமுருகாதவன், இறந்துபோன பிணத்திற்குச் சமானமே யாவான். இந்தியாவில், சங்கீத மென்பது நீண்ட காலமாக ஒரு கலை ஞானமாகப் பயிற்சி செய்யப் பட்டு வந்தது. ரிஷிகளும் மன்னாதி மன்னர்களும் சங்கீத தேவதையைப் போற்றி வந்தார்கள். நமது நாட்டில், சங்கீத ஞானம் பூரணத்துவத்தை அடைந்திருந்தது. இந்த ஞானம் பரம்பரையாக வந்துகொண்டிருந்தது.

### முற்காலத்தில் சங்கீதம்

இந்தியாவில், மொகலாய சக்ரவர்த்தியான் மிகப் பிரசித்தி பெற்ற அக்பர் அரசாட்சி செய்து கொண்டிருக்கையில் சங்கீதம் உச்சஸ்தானத்தை அடைந்திருந்தது. அவுரங்கசீப் காலத்தில் அது சிறிது பிற்போக்கை யடைந்தது. அதுமுதல், சங்கீத ஞானம் குறைந்துகொண்டே வந்த தென்று கூறவேண்டும். இந்தியாவில், சங்கீதம் இன்னும் இறந்துபடாம லிருப்பது நமது பெரிய அதிருஷ்டமே யாகும். நூற்றாண்டுகள் கணக்காகப் புறக்கணிக்கப்பட்டு வந்ததினாலும், வைதிகக் கொள்கையினர் குறை கூறிக்கொண்டு வந்ததினாலும், பிரிட்டிஷ் ஆதிக்கம் ஏற்பட்டதற்கு முன்னரேயே சங்கீதம் அழிந்துபோயிருக்கும். ஆனால் சங்கீதத்தையே தொழிலாகக் கொண்ட சிலருடைய முயற்சியினாலும், தனிப்பட்டவர்களுடைய ஆதரவினாலும் சங்கீத ஞானம் அடியோடு அழிந்துபட வில்லை.

### சங்கீதத்தின் எதிர்காலம்

இந்திய சங்கீதத்தின் எதிர்காலம் மிகச் சிறப்புற்றதா யிருக்கும் என்று எண்ணப்படுகிறது. பொது ஜனங்களுடைய ஒத்துழைப்பினாலேயே, இது தனது பழைய அந்தஸ்தை யடையும். அரசாங்கத்தாரும், சங்கீதப் பள்ளிக்கூடங்களுக்குப் போதிய கிராண்டுகள் கொடுத்து ஆதரிக்க வேண்டும். அரசாங்கத்தார், பண உதவி செய்கின்றனர் என்பதனால் மட்டுமன்று, அரசாங்கத்தாரின் ஆதரவு சங்கீதத்திற்கு இருக்கிற தென்றால், ஜனங்களுக்குச் சங்கீதத்தின் விஷயத்தில் நன்மைக்குரிய ஒரு மாறுதல் ஏற்படும். சர்வ கலாசாலைகளும் இவ்விஷயத்தில் பின் வாங்கக் கூடாது. சங்கீதத்திற் கென்று பாட புத்தகங்கள்ஏற்படுத்தி, பரீட்சைகள் நடத்திப் பட்டங்கள் அளிக்கவேண்டும். சங்கீதத்தின் எதிர்காலப் பெருமை நமது நாட்டு ஸ்திரீகள் வசமே இருக்கிறது. ஒவ்வொரு வீட்டு எஜமானியும் சங்கீத நிபுணையாக இருந்தால் அந்த வீடு சுவர்க்கமாகவே இருக்கும். மனிதனை, இவ்வுலக சுகத்தினின்று பிரிக்காம லிருப்பது சங்கீதமேயாகும். ஒவ்வொருதாயாரும் தமது பெண்களுக்குச் சங்கீதம் கற்றுக் கொடுப்பாராக. இல்லற வாழ்க்கை இக்கட்டாக இல்லாமல் இருப்பதற்கு, சங்கீதம் ஓர் இன்ஷ்யூரன்ஸ் போன்றதாகும். கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த ஸ்திரீகள் சங்கீதத்தைப் பயிலத் தொடங்கினார்களானால், இவ்வரிய கலை தனது பூர்வீக பதவியை யடையும் என்பதில் ஐயமில்லை. (ச - டை.)



## மதுரை இராமநாதபுரம் ஜில்லா அரசியல் மகாநாடு

### திருமங்கலத்தில் கூடியது

### ஜனாப் பஷீர் அகமது சையதின் தலைமையுரை

மதுரை இராமநாதபுரம் ஜில்லா நான்காவது அரசியல் மகாநாடு 14-12-29ல் திருமங்கலத்தில் கூடியது. அன்று காலை ஸ்ரீமான் இராஜாராம் பாண்டியன் கொடி யேற்று விழாவை நடத்தினார். ஸ்ரீமதி டாக்டர் பிச்சை முத்து அம்மாள் கதர் கண்காட்சியைத் திறந்து வைத்தார். ஸ்ரீமான் பி. எஸ். குமாரசாமி ராஜா மகாநாட்டைத்திறந்து வைத்தார். ஸ்ரீமான் கே. வேங்கடாத்திரி நாயுடு, வரவேற்புக் கூட்டத் தலைவராயிருந்து சிறந்த தொரு சொற்பொழிவு நிகழ்த்தினார். பிறகு ஜனாப் பஷீர் அகமது சையது மகாநாட்டுக்குத் தலைமை வகித்து நிகழ்த்திய சொற்பொழிவின் முக்கிய பாகங்கள் வருமாறு:—

### பரம வறுமை

மகாத்மா காந்தி சிறை சென்ற பின்னர், பண்டித மோதிலால் நேருவின் தலைமையில் சுற்றுப் பிரயாணம் செய்த சட்ட மறுப்பு விசாரணைக் கமிட்டியார் வெளியிட்ட அறிக்கையின் பயனாக ஒத்துழையாமை இயக்கம் ஒத்திவைக்கப்பட்ட பின்னர், நாம் சுயராஜ்ய மடையும் பாதையில் குறிப்பிடத் தகுந்த எவ்வித வேலையும் செய்துவிட வில்லை. 1923-ம் ஆண்டுக்குப் பின், ஜனங்களுக்கு அரசியல் ஞானத்தைப் பரப்பி, வேறு பல துறைகளிலும் வேலை செய்திருக்கிறோமாயினும், ஜனங்களது மனோ நிலைக்கும் கால மாறுபாட்டுக்கும் ஏற்ற உத்வேகமுள்ள திட்ட மொன்றும் இல்லாமையால் ஜனங்களது சோர்வையும் வேற்றுமைகளையும் போக்குவதற்கு நாம் செய்த முயற்சிகளனைத்தும் பயனற்றுப் போயின. ஆகையால் சுயராஜ்ய பாதையில் நாம் சிறிதும்முன் செல்ல முடியவில்லை. இத்தகைய அயர்வுக்கு இன்னும் பல்வேறு காரணங்களிருக்கலாம். அவற்றை இங்கு நான் கணக்கிட விரும்பவில்லை. ஆயினும் முக்கியமான சிலவற்றை மாத்திரம் குறிப்பிட விரும்புகிறேன். ஜனங்களை நசுக்கிக் கொண்டிருக்கும் வறுமையும், மிகக் கேவலமான செல்வா தார நிலைமையும், எவ்வித வருவாயு மற்ற இந்நாட்டு மக்கள் மேலும் மேலும் அதிக தியாகத்துடன் புரிய வேண்டி யிருக்கும் நெடிய போரும் பணக்காரர்கள் பொதுநல உணர்ச்சியற்றுப் போதிய ஆதரவளிக்காதிருப்பதும், பொதுநலப் பொறுப்புணர்ந்து சேர்ந்துழைக்கும் உணர்ச்சியும் ஆற்றலும் நம்மிடமில்லாமையும், தன்னம்பிக்கை சிறிது மற்றதன்மையுமே நமது முயற்சிகள் பலனற்று நாம் இன்று இருக்கும் நிலைக்குக் காரணமாகும். நடுத்தர வகுப்பார் நாட்டுக்காகச் செய்திருக்கும் தியாகத்தையாவது அல்லது நீதியினிமித்தம் எத்தகைய துன்பத்தையும் ஏற்றுக் கொள்ளத் தயாராகவிருக்கும் அவர்களது ஆற்றலையும் உணர்ச்சியையுமாவது நான் குறை கூறவுமில்லை, குறைகூறவும் என்னால் இயலாது. ஆயினும், அவர்கள் எவ்வளவு அதிதீவிரமாக இன்றுதினமிருப்பினும் ஒரு எல்லையற்ற காலம் வரை இவ்வாறே இருப்பது முடியாத காரியமென்பதை நாம் ஒப்புக் கொள்ளவேண்டும்.

### ஹிந்து முஸ்லிம் பிரச்னை

சிறுபான்மை வகுப்பாரின் ராஜீயம் அல்லது ராஜீயமல்லாத செயல்களினால் பெரும்பான்மை வகுப்புகளிலே ஒரு சாராரின் தேசியப்பற்று தளரலாயிற்று. மேலும் தேசத்திலே பற்பல பாகங்களில் கணக்கற்ற கலகங்களும் சச்சரவுகளும் உண்டாக, அவை காரணமாக இருவகுப்பினருக்கும் இடையே சந்தேகங்களும் கசப்பும் தோன்றலாயின. இருபக்கத்திலும் இலகுவில் பெயரெடுக்க விரும்பிய பெயர்வழிகளும் விஷமக்காரர்களும் அவற்றை இலகுவில் கையாண்டு, சமூகங்களுக்குள்ளே விரோதத்தை இன்னும் அதிகப்படுத்தலாயினர். முடிவாக தத்தம் சமூக நலத்தை விருத்தி செய்வதற்கென்ற வேஷத்துடன் பல வகையான ஜாதி, வகுப்பு சங்கங்கள் கிளம்பலாயின. எனவே ஒரு சமயத்தில் அனேகமாய்க் கைகூடிய ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை மேற்சொல்லிய பலவகையான காரணங்களால் இன்று தீராப்பெரும் பிரச்னையாகிவிட்டது. காலஞ்சென்ற தேசபந்து தாஸரின் சலியா முயற்சியினாலும் ஸ்ரீமான் ஸ்ரீனிவாசய்யங்காரின் மனப்பூர்வமான ஊக்கத்தினாலும் ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை விஷயம் முன்னொரு சமயம் கைகூடும் தருவாயிலிருந்தது. பிணங்கிப் பகைத்து நின்ற இரு சமூகத்தினரையும் ஒரு மனப்படுத்துவதில் அவ்விருவரும் முக்கால் வாசி பலனடைந்தனர். ஆனதுபற்றி அவ்விருவருக்கும் வந்தனமளித்தல் வேண்டும். ஆயினுமென்ன? அந்தோ! பின்னர் நிகழ்ந்த சம்பவங்களோ அவ்விருவரது முயற்சிகளைச் சிதற அடித்துவிட்டன. முஸ்லிம் சமூகம் மட்டுமல்லாமல் பொதுவாகத் தேசமும் அவ்விரு பெரியாரிடம் மிக்க நன்றி காட்டவேண்டும். ஹிந்து முஸ்லிம்ஒற்றுமைக்காக அவ்விருவரும்உறுதியான அடிப்படை கோலி உண்மையான மார்க்கம் காட்டியிருப்பது விசேஷமாகும். அவ்விருவரின் வழியைப் பின்பற்றி மீண்டும் நம் தலைவர்கள் மனப்பூர்வமாக முயன்றால் ஹிந்து முஸ்லிம் விஷயத்தைத் தீர்த்து வைத்து விடலாம்.

### விடுதலையே லட்சியம்

இவ்விரு சமூகத்தாரும் ஒன்று பட்டுப் பொது விரோதியை எதிர்ப்பதற்குரிய சாத்தியத்தில் எனக்குள்ள நம்பிக்கை ஒரு சிறிதும் குறையவில்லை யென்று உறுதி கூறுகிறேன். இரு வகுப்பாருக்குள்ளும் தோன்றியுள்ள வேற்றுமைக்குக் காரணம் சர்வ சாமானியமானதே. பெரும் பான்மையோரது தொகையைக் கண்டு சிறுபான்மையோர் கொண்டுள்ள பயம் ஒழிந்து சிறுபான்மையோரது நியாயமான உரிமைகளை அளிக்க வேண்டு மென்ற உணர்ச்சியைப் பெரும்பான்மையோர் பெற்றுவிடில் ஹிந்து முஸ்லீம் பிரச்னை நெடு நாட்களுக்கு முன்னரே முடிவு பெற்றிருக்கும்.

நற்காலமாக, இராஜப் பிரதிநிதியின் அறிக்கை,நேரு அறிக்கையைக் கட்டிவைத்துவிட்டு இரு வகுப்பாரும் சேர்ந்துழைக்க ஒரு நல்ல சந்தர்ப்ப மளித்திருக்கிறது. உண்மையான தேசிய உணர்ச்சியும், நாட்டைப் பாதுகாக்க வேண்டு மென்ற ஆர்வமுமிருக்குமானால், பரஸ்பர அன்புடன் இருவகுப்பாரும் சேர்ந்து உழைப்பதற்கு ஒரு நல்ல சந்தர்ப்பம் வாய்த்திருக்கின்றது. ஆகையால் இரு வகுப்பையும் சேர்ந்த தலைவர்கள் காலஹரணம் செய்யாமல் இருமக்களையும் ஒன்று சேர்த்து நமது சுதந்தரத்தைக்கைப்பற்ற ஒரு திட்டம் தயாரிப்பார்களென்று நம்புகிறேன்.

### பிராமண ரல்லாதாரியக்கம்

ஆனால் நமது துர் அதிருஷ்ட வசமாக இம்மாகாணத்தில் பிராமணர்—பிராமண ரல்லாதார் பிணக்கு இருந்து வருகிறது. எந்த எந்த உத்தேசத்துடன் இவ்வியக்கம் ஆரம்பிக்கப்பட்ட தென்பதும், அது அடைந்த மாறுதல்களும் அது எவ்வாறு உபயோகிக்கப் பட்டு வந்தது, வருகிறதென்ற விஷயங்களையும் நான் உங்களுக்குக் கூற வேண்டியதில்லை. ஆனால் அனேக கொள்கைகளில் ஒன்றாக வுள்ள வகுப்பாருக்குள் தோன்றியுள்ள இப்பிளவு ஹிந்து மதத்தின் பெருமைக்கும், கல்விக்கும் ஒத்ததல்ல வென்று கூறுதலே போதுமானது. ஓர் வகுப்பாருக்குள் தோன்றியுள்ள இப்பிளவானது கர்விதியோகப்படுத்தப் பட்டு தேசிய முன்னேற்றத்தைப் பெரிதும் பாதித்து விட்ட தென்பதை நான் கூறவேண்டுவதில்லை. இம்மாகாணத்திலே பிராமணர் பிராமணரல்லாதார் என்ற வேற்றுமையினால் பொதுவாழ்வு பாதிக்கப்பட்டு விட்டதைக் கண்டு, மகாஜனங்கள் மனச்சலிப்புக் கொண்டு விட்டனர். எனவே, அவ்வேற்றுமை விரைவில் ஒழிந்தாலன்றிப் பொதுவாழ்வும், இராஜீய உணர்ச்சியும் நேர் முறையில் செவ்வனே நன்கு ஒங்க முடியாதென்பதையும் மகாஜனங்கள் உணர்ந்துள்ளார்கள். ஒரு பெரு வகுப்பைச் சேர்ந்த இருபிரிவினரும் பரஸ்பர நம்பிக்கையுடனும், நல்லுணர்ச்சியுடனும் கூடிய சம்பந்தத்தை நிலைநிறுத்திக் கொள்ளவேண்டிய காலஞ் சமீபித்து விட்டதென்று கருதுகிறேன்.

### தீண்டாமை

தீண்டாமை பிரச்னையும் அவ்வாறே ஹிந்து மதத்தின் பெருமைக்கு ஓர் இழுக்காகும். நான் கூறுவதை யாரும் தப்பர்த்தம் செய்து கொள்ளக் கூடாது. நம்மை சுதந்திரம் வேண்டு மென்று போராடும் பொழுது, சமூகவாழ்வில் தாழ்த்தப் பட்ட நமது சகோதரர்களுக்கு விடுதலை யளிக்க வேண்டியது நியாயமும் தர்மமுமாகும். ஆனால் தீண்டாமையை அடியுடன் ஒழித்தாலல்லது இந்தியாவுக்குச் சுயராஜ்யம்கிடைக்காதென்றும், ஆகையால் எல்லா வேலைகளையும் நிறுத்திவிட்டு இதை முதலில் ஒழிக்க வேண்டுமென்றும் கூறுவோரது வாதத்தை நான் ஒப்புக்கொள்ள முடியாது. நிர்மாண வேலைகளைப்பற்றி ஒவ்வொருவருடமும் காங்கிரஸில் வலியுறுத்திப்பேசப்பட்டிருக்கிறது. அதையே திரும்பத் திரும்பப் பேசி நான் நேரத்தைக் கழிக்க விரும்ப வில்லை. தேசம் அவைகளைப் பூர்த்தி செய்திருக்குமானால் எல்லாவற்றிலு மல்லாவிடினும் சில வற்றிலாவது நாம் விசேஷ அபிவிருத்தி யடைந்திருக்க முடியும்.

### கதர் - மதுவிலக்கு

சர்க்காவினால் தான் சுயராஜ்யம் வருமென்றும் ஆகையால் நமது முழு கவனத்தையும் ராட்டையிலேயே செலுத்தவேண்டுமென்றும் கூறுவதையும் நான் ஒப்புக் கொள்ள முடியாது. இந்நாட்டு மக்களுள் பெரும்பாலோரான விவசாயிகளின் செல்வாதார நிலைமையைப் பெருக்குவதால் இது நமது திட்டங்களில் ஒன்றாக விருப்பதை எவரும் மறுக்க முடியாது. ஆனால் கதர் மாத்திரமே நமது உத்தேச லட்சியத்தை யடையும்படி செய்யுமெனக் கூறுவதை அநேகர் ஒப்புக் கொள்ள மாட்டார்கள்.

மதுவிலக்கும் அத்தகைத்தேயாகும். நமது மக்களது முன்னேற்றத்துக்கு ஒரு பெருந் தடையாகவும், ஏழை மக்களது துன்பங்களுக்கும் துயரங்களுக்கும் காரண பூதமாகவுமிருக்கும் குடிப் பழக்கத்தை அடியுடன் தொலைப்பதால் செல்வாதார நிலைமை அபிவிருத்தியடையு மென்பதில் ஆட்சேபமில்லை. இதற்கு இரண்டே வழிகள் உள. விடா முயற்சியுடனும் ஊக்கத்துடனும் நாடெங்கும்பிரசாரம் செய்து கட்டுப்படுத்துவ தொன்று; சட்ட பூர்வமாக ஒழிப்பது மற்றொன்று. மாகாண அரசாங்கத்தில் தேசீய முன்னேற்றத்துக்குத் தடையாக விருப்பவரிடம் அதிகா மிருக்கும் வரை பிந்திய முறை சாத்திய மில்லை.

### தற்கால அரசியல் நிலை

கல்கத்தா காங்கிரஸின் தீர்மானத்திற்குப் பிறகு தேச ராஜீய நிலையில் ஏற்பட்ட சமீப சம்பவங்களைக் கவனிப்போம். அத்தீர்மானத்தின் விசேஷத்தையும் உட்கருத்தையும் பற்றி நான் உங்களுக்கு ஞாபகமூட்ட வேண்டியதில்லை. ஆனால் முஸ்லிம் ஜன சமூகம் இன்றளவும் அதனைப் பூராவாக அங்கீகரிக்கவில்லை. பரிபூரண சுயேச்சையே இந்தியாவின் லட்சியமாக விருக்கவேண்டு மென்பது ஒரு கட்சி. குடியேற்ற நாட்டு அந்தஸ்து கிடைத்தால் போதுமென்பது மற்றொரு கட்சி. எனவே இரு கட்சிக்கும் சமாச முண்டுபண்ண, இவ்வாண்டின் முடிவிற்குள் குடியேற்ற நாட்டு அந்தஸ்து கிடைத்தால் அதை ஒப்புக் கொள்வோ மென்பது அத்தீர்மானத்தின் முக்கிய அம்சமாகும். இவ்வாண்டு அனேகமாகத் தீர்ந்துவிடப் போகிறது. இராஜப் பிரதிநிதியோ இங்கிலாந்திலிருந்து திரும்பிவந்து ஓர் அறிக்கை வெளியிட்டிருக்கிறார். அந்த அறிக்கையோ ஒரு குழ்ச்சியாகும். காங்கிரஸ் திட்டத்தின் சில அம்சங்களை ஓரோர் சமயத்தில் ஒப்புக்கொள்ளும் மிதவாதிகள் என்போர் இருக்கின்றனர். சைமன் பகிஷ்காரத்தில் ஈடுபட்டாலும் அதனின்று கத்தரித்துக் கொண்டு வெளியேற ஒரு வியாஜத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் மிதவாதிகள் காங்கிரஸிலும் அதற்கு வெளியிலு மிருக்கின்றனர்.

அத்தகைய பேர்வழிகளைக் காங்கிரஸினின்றும் பிரித்து அரசாங்கத்தின் பக்கம் இழுத்துக் கொள்வதே அந்த அறிக்கையின் கருத்தாகும். சர்வகட்சி மகாநாடு கூட்டப் போகிறோமென்று அரசாங்கம் சொல்லும் நிலைதானெப்படி! சைமன் கமிஷன் பகிஷ்காரத்தால் அரசாங்கத்துக்கு ஏற்பட்டுள்ள கஷ்டமான நிலையைப் போக்கிக் கொள்வதே அம்மகாநாட்டின் கருத்தாகும். தற்கால ராஜீயநிலையைஇராஜப்பிரதிநிதி நன்குஅறிந்திருக்கிறார் என்பது நிச்சயம் தான். அதனால் மட்டும் என்ன பயன்? அம்மகாநாடு எவ்வாறு அமைக்கப்படும், அதில் என்ன விஷயம் விவாதிக்கப்படும், அதன் முடிவு என்ன ஆகும், அது எப்பொழுது கூட்டப்படும், ஆகிய இவ்விஷயங்களி லொன்றும் அந்த அறிக்கையில் காணப்படவில்லை. இந்நிலையில் தேசத் தலைவர்கள் ஓர் அறிக்கையை வெளியிட்டது மிக்க அக்கரமாகும். பார்லிமெண்டின் இரு சபைகளிலும் அந்த அறிக்கை சம்பந்தமாய் நடந்த விவாதத்தைப் பாருங்கள். இன்னது தரப் போகிறோமென்று பிரிடிஷ் அரசாங்கத்தார் திடமாக எதுவும் சொல்லவில்லை. இத்தகைய நிலையில் தலைவர்கள் ஓர் அறிக்கை வெளியிட்டுத் தங்களையும் பிறரையும் கஷ்ட நிலைமைக்கு ஆளாக்கி விட்டனர். காங்கிரஸ் காரியக்கமிட்டியும் தேசத்தையும் பிறரையும் நடத்திக் கொண்டு செல்லாது பிறரால் நடத்தப்பட்டு அந்த அறிக்கையை ஒப்புக் கொண்டிருக்கிறது. சில நிபந்தனையும் காரியக் கமிட்டியார் சொல்லி யிருப்பது வாஸ்தவந்தான். ஆயினுமென்ன? இராஜப் பிரதிநிதியின் அறிக்கையையும் அதன் பின்னர் நிகழ்ந்த சம்பவங்களையும் பார்த்தால் காங்கிரஸின் தீர்மானத்துக்குப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஒரு சிறிதும் இணங்கவில்லை யென்பது வெளிப்படை. தலைவர்களின் அறிக்கையில் கண்ட நிபந்தனைகளில் ஒன்றைக் கூடப் பூர்த்தி செய்துவைக்க இந்தியா மந்திரி மறுத்துக் கொண்டே வருகிறார். இந்தியாவுக்கு வர திரு. சக்லத்வாலாவுக்குப் பிரயாண அநுமதிச் சீட்டுக் கொடுக்க அடியோடு மறுத்து விட்டதையும் பாருங்கள். எனவே, இராஜப்

பிரதிநிதியும் ஆங்கில இராஜ தந்திரிகளும் பேசும் பேச்சு வெறும் பேச்சென்பது நிதர்சனம். ஆதலால் நமது ராஜீயப் போரில் அணி வரிசையைமாற்றிக்கொள்ள யாதொரு சந்தர்ப்பமும் கோவில்லை யென்ற எண்ணத்துடன் நாம் நமது வேலைத் திட்டத்தையும் கொள்கையையும் கைக்கொண்டு முன்னேற வேண்டும். அங்ஙனம் முன்னேறும்பொழுது தேசத்தின் கண்டிப்பான கோரிக்கையைப் பூர்த்திசெய்து வைக்க அதிகார வர்க்கம் உண்மையில் முயலுவதாக நமக்குத் தெரிந்தால் அப்பொழுது நமது இராஜீய வேலையை நிறுத்தி வைக்கவோ வேறு விதமாக மாற்றிக் கொள்ளவோ நாம் யோசிக்கலாம்.

### பரிபூரண சுயேச்சை

பரிபூரண சுயேச்சை விஷயமாக எனது நிலை என்ன? நான் ஒரு முஸ்லிம். இஸ்லாமிய ஆதிக்கமோ ஐரோப்பாவிலும், ஆசியாவிலும் பலவிடங்களிலும் பரவியிருந்ததாகும். ஆதலால் சுதந்தரத்தின் மகா உன்னதப்படியில் ஏறுவதைத் தவிர வேறு எதற்கும் நான் இணங்க முடியாது. நமது தேசமோ, தற்சமயம் ஆங்கில சாம்ராஜ்யத்தை அண்டிக் கிடக்கும் சார்பு நாடாகக் கிடக்கின்றது. ஆகவே அண்டிக் கிடக்கும் சார்பு நாடென் பதினின்றும் விடுபட வேண்டுமென்றும், அதாவது பரிபூரண சுயேச்சை யடைய வேண்டும் என்பதையே நமது மக்கள் லட்சியமாகக் கொள்ள வேண்டும். பரிபூரண சுதந்தரத்தை லட்சியமாகக் கொண்டு அதனை அடைவதற்காக நீதியும், அமைதியும் பொருந்திய வழியில் பாடுபடுவது பாவமுமாகாது; குற்றமு மாகாது. பரிபூரண சுயேச்சை யடைய வேண்டுமென்ற ஆசை நமக்கிருக்கையில், ஆங்கில சாம்ராஜ்யத்துடன் சரி சமானமான நிலையில் நண்பர்களாக வாழ முடியு மென்பது நடவாத காரியமென நாம் கொள்வதற்கில்லை. நமது லட்சியமான பரிபூரண சுயேச்சையை அடையும் முயற்சியின் இடையே, நமது சுதந்தரத்தின் ஓரளவு நமக்குக் கொடுக்கப்படின், அதனை யான் ஏற்றுக் கொண்டு பூராவும் அடைவதற்கு முயன்று வருவேன். நமது கோரிக்கைகளில் சில வற்றை மறந்து விடாமல் ஏற்றுக் கொண்டு முழுவதையும் அடைய முயலுவேன். இங்ஙனம் நான் சொல்வதால், ஓரளவு சீர்திருத்தம் கிடைப்பதைக் கொண்டு, பரிபூரண சுயேச்சை லட்சியத்தை நழுவ விட்டுவிட நான் சம்மதிக்க மாட்டேன்.

எனவே, இராஜீய நிலையில் இனி என்ன நிகழப் போகிறதென்று பார்த்திருப்போம். யாது நிகழினும், நிகழாமற் போயினும் லாகூர் காங்கிரஸ் சமயத்துக் கேற்றபடி தலை நிமிர்த்து, தனது உன்னத நிலையை நிலை நாட்டுமென்பது எனது நம்பிக்கை. ஆதலின் தகுதியான, நேர்மையான தீர்மானம் கொள்ளுமாறு காங்கிரஸ் மகாசபைக்கு பக்க பலமாக இருப்போமாக.

### நிறைவேறிய தீர்மானங்கள்

மேற்படி மகாநாட்டில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன :—

இவ்வருஷம் வங்கவாலிபரும் வங்காள மாகாண கமிட்டிக் காரியதரிசியும் 25 வயதடையவருமான ஸ்ரீ ஜத்யீந்திரநாத்தாஸ் அவர்களை ஜெயிலில் பரிசிலனைக் கமிட்டியார் விடுதலை செய்யச்சொல்லியும் 63 நாள் பட்டினி இருக்கச்செய்து உயிர் போகச்செய்த அதிகாரிகளின் செய்கையைக் கண்டிப்பதுடன் யதீந்திரதாஸ் அவர்களின் ஆத்மா சாந்தியடைய இம்மகாநாடு பிரார்த்திக்கிறது.

ஸ்ரீமான்கள் திருமங்கலம் அ. கந்தசாமி செட்டியார், அய்யம்பெருமாள் பிள்ளை இவர்களுடைய மரணத்திற்கு மிகவும் வருந்துவதுடன், அன்னார்களின் ஆத்மாசாந்தியடைய வேண்டுமென்றும் இம்மகாநாடு பிரார்த்திக்கிறது.

1929-ம் வருஷத்தில் கல்கத்தா காங்கிரஸின் குடியேற்ற நாட்டு அந்தஸ்தைப் பற்றிய தீர்மானத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் டிசம்பர் மாதம் 31-ந் தேதிக்குள் அமுலுக்குக் கொண்டு வரத் தவறினால் 1930-ம் வருஷம் ஜனவரி மாதம் 1-ந்தேதி முதல் சாத்தியமானதும் நியாயமானதுமான எல்லா வித முறைகளாலும் இந்தியாவில் சுயேச்சை ஸ்தாபிப்பதுதான் காங்கிரஸின் கொள்கையாகுமென்று இம்மகாநாடு சிபார்சு செய்கிறது.

மதுரை இராமநாதபுரம் ஜில்லா மாகாண கமிட்டி அங்கத்தவர்கள், கமிட்டியின் அடுத்த கூட்டத்தில் மதுரை அடக்கு முறைக்கு ஆளான தேசபக்தர்களுக்குப் பொருளுதவி செய்யக் கோர வேண்டுமென்று அவர்களை இம்மகாநாடு கேட்டுக்கொள்கிறது.

அகில பாரத சர்க்கா சங்கத்தார் இராஜபாளையம் கதர் வியாபாரிகளது அத்தாட்சிப் பத்திரத்தை ஏதோ சில காரணங்களால் ரத்து செய்ததைக் கண்டிப்பதுடன் கூடிய சீக்கிரம் அத்தாட்சிப் பத்திரத்தை மீண்டும் கொடுத்து மேற்படி வியாபாரத்தின் முன்னேற்றத்துக் குரிய உதவிகளைப் புரிய வேண்டுமென்று மேற்படி சர்க்கா சங்கத்தாரை இம்மகாநாடு கேட்டுக் கொள்ளுகிறது.

10-12-29ல் மதுரைக்கு வைசிராய் வந்த காலத்து தேசிய பஜனையுடன் சென்ற மதுரைத் தொண்டர்களிடத்தில் போலீஸ் அதிகாரிகள் நடந்தகொண்டதை இம்மகாநாடு கண்டிக்கிறது.

ஸ்ரீ சாப்பூர்ஜி சக்லத்வாலாவை இந்தியாவுக்குவர அனுமதிச் சீட்டு கொடுக்க மறுத்த பிரிட்டிஷ் மந்திரியின் செயலை இம்மகாநாடு மிகவும் அழுத்தமாக் கண்டிக்கிறது.

நேரு அறிக்கை விஷயமாக முஸ்லீம்களுக்கும் சீக்கியர்களுக்கும் ஏற்பட்டிருக்கும் தகராறுகளை லாகூர் காங்கிரஸ் இனிக்கூடப் போகும் ஸர்வகட்சி மகா நாட்டுக்கு முன்னதாகத் தீர்த்து வைத்துக் காங்கிரஸில் ஒற்றுமையையும் நம்பிக்கையையும் அன்னார்களுக்கு ஏற்படும்படியாகச் செய்தாலொழிய காங்கிரஸ் முயற்சிகள் பயன்படாவென்று இம்மகாநாடு அபிப்பிராயப்படுகிறது.

வடஇந்தியாவில் தாழ்மைப்பட்டவர்களுக்காக ஸ்ரீ சேத் ஜம்னலால்பஜாஜ் அவர்கள் தீவிரமாகப் பாடுபட்டு வருவதை இம்மகாநாடு பாராட்டுவதுடன் நம் தமிழ்நாட்டில் அம்மாதிரி வேலை துவக்க வேண்டுமென்று தீர்மானிக்கிறது.

நமது பாண்டி நாட்டிலுள்ள ஒவ்வொரு ஜில்லாவும் ஜில்லா மகாநாட்டை வருஷந்தோறும் தனித்தனியே நடத்து வதற்கு இயலாமலும் அவ்விதம் செய்வதில் வீண் பணச் செலவும் சிரமமும் ஏற்படுவதாலும் இனிமேலும் மேற்படி பாண்டி மண்டலத்திலுள்ள 5 காங்கிரஸ் ஜில்லாக்களும் ஒருங்கு சேர்ந்து 'பாண்டிய மண்டல ஜில்லாக்கள் மகாநாடு' என்ற பெயரால் நடத்த வேண்டுமென்று இம்மகாநாடு கருதுவதுடன் மற்ற ஜில்லா காங்கிரஸ்காரர்களையும் வேண்டிக் கொள்ளுகிறது.

கதர், தீண்டாமை, மதுவிலக்கு முதலிய காங்கிரஸ் நிர்மாணத்திட்டங்களை ஜில்லா முழுவதும் முக்கியமாக ஒவ்வொரு கிராமத்திலும் நிறைவேற்றி வைக்க வேண்டுமென்று இம்மகாநாடு கேட்டுக்கொள்ளுகிறது.

### எலி கதை விடுவுக்கு விடை

ஆரம்பத்தில் வரங்கேட்ட எலிகள் 41. அவை ஒன்றுக்குப் பூனை தின்ற எலிகள் 24. என்பது சரி. பல கடிதங்கள் வந்திருப்பதால் அனைத்தையும் வெளியிட முடியவில்லை.

தி. பார்த்தசாரதி நாயகர்,
கணித ஜோதிட பண்டிதர், மதராஸ்.

### முனிராஜ் தண்டு வழக்கு

பயமுறுத்தல் கடிதமொன்றை எழுதியதற்காக முனி ராஜ் தண்டு என்பார் மீது புதிய டெல்லி அடிஷனல் ஜில்லா மாஜிஸ்திரேட் முன் நடை பெற்று வந்த வழக்கில் 10-12-29ல் எதிரி மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். எனினும், கோர்ட்டு கலையும் வரை அவருக்குச் சிறைதண்டனை விதிக்கப் பட்டது.



## அடக்குமுறை

### மீரத் சதியாலோசனை வழக்கு

மீரத் சதியாலோசனை வழக்கு 9-12-29 லிருந்து நடைபெற்று வந்து 16-12-29 ல் முடிவடைந்து விட்டது. எதிரிதரப்பு வக்கீல் ஸ்ரீமான் சின்ஹா தமது வாதத்தை மீண்டும் தொடங்குகையில், இந்தியாவிலுள்ள பொதுவுடமைக் கட்சிகள், தொழிலாளர் கிருஷிகர் கட்சி முதலியவைகள் இந்தியாவிலுள்ள பொருளாதார சம்பந்தமாக இயற்கையாக ஏற்பட்ட சுதேசக் கட்சிகளேயன்றி, இவைகளுக்கும் ருஷ்யாவிற்கும் எவ்வித சம்பந்தமுமில்லை யென்று கூறினர். பின்னர் எதிரி டாங்கே, இங்கிலாந்தும் சோவியத் ருஷ்யாவும் செய்து கொண்ட உடன் படிக்கையைக் குறிப்பிட்டு, அதன்படி இவ்வழக்கை மேலே நடத்திக் கொண்டு போக முடியாதென்று ஆட்சேபித்து இனி அரசாங்கத்தார் பிராதை மாற்றலாம் அல்லது புதிய வழக்குத் தொடரலா மென்றும் கூறினர். எதிரிதேசாயை விடுதலை செய்ய வேண்டுமென்று அவருடைய வக்கீல் ஸ்ரீமான் ஏ. எச். கிருந்திகர் வாதித்தார். இன்னும் மற்ற எதிரிகளான சௌத்ரி தர்ம வீரசிங்கு, காஸ்லி, இவர்கள் தங்கள் கட்சியைக் குறித்துத் தாங்களே வாதஞ் செய்தார்கள். முடிவில் எதிரி தரப்பு வக்கீல் ஜனுப் அன்சாரி மாஜிஸ்திரேட் இவ்வழக்கில் சுயேச்சையாக அறிவை உபயோகிப்படுத்தி வந்ததற்காக வந்தன மளித்து, இதுவரை விசாரணை நடைபெற்று வந்ததில் எதிரிக ளெல்லோரும் தேசியவாதிகளாகவோ அல்லது தொழிற் சங்கவாதிகளாகவோ இருக்கின்றனர் என்றும் எனவே எல்லோரையும் விடுதலை செய்ய வேண்டுமென்றும் வாதித்தார். எதிரி ஜாப்வாலா மீண்டும் 12-12-29 விருந்து 14-12-29வரை வாதஞ் செய்தார். அதுபோது, ஸ்ரீ ஜாப்வாலா, வக்கீல்கள் மனித சமூகத்தை நசுக்கி வாழ்பவர்களென்று அபிப்பிராயப்பட்டதனால், தாம் சட்டக்கல்வி கற்பதை விட்டு விட்டதாகவும் வக்கீல் தொழில் விரும்பத்தகாத தென்று கருதியதாகவும், தாம், கைது செய்யப் பட்டபோது தொழிற்கட்சி முதலியவைகளினின்று விலகிக்கொண்டதாகவும், தாம் ஒரு குற்றமும் புரியாததனால் மன்னர் பிரானுடைய சர்வாதிகாரத்தை நீக்க முயன்றதாகச் சாட்டப்பட்டிருக்கும் பிராது தவறு என்பதாகவும். அடுத்த பட்ட ஜாப்வாலில் மாஜிஸ்திரேட் பெயரையும் காணலா மென்று தாம் நம்புவதாகவும் கூறினர். பின்னர் எதிரி தரப்பு மற்றொரு வக்கீலான ஸ்ரீமான் பி. டி. ஜோஷி எதிர்தரப்பின் வாதத்தை நிகழ்த்தினர். அதற்குப் பிராசிகியூஷன் தரப்பில் ஸ்ரீமான் ஜே. மித்தர் பதில் கூறுமுகத்தான் தம் வாதத்தை நிகழ்த்தினர். இத்துடன் மாஜிஸ்திரேட் கோர்ட் விசாரணை முடிவுற்றது. எனவே பிரத்தியேக மாஜிஸ்திரேட் ஸ்ரீமான் மில்னர் ஒயிட் 2-1-1930ல் தீர்ப்புக் கூறுவதாக அறிவித்தார்.

### லாகூர் சதியாலோசனை வழக்கு

லாகூர் சதியாலோசனை வழக்கு 9-12-29 லிருந்து நடந்து வருகிறது. எதிரி விஜய குமார சின்ஹா அப்ருவர் லலிதமுகர்ஜியைக் குறுக்கு விசாரணை செய்தபோது, அவரைத் துரோகி யென்றும், கோழை யென்றும் கூறினர். 'துரோகி' என்ற பதம் உபயோகிக்கப்பட்டதை அரசாங்க அட்வகேட்டும், பின்னர் மாஜிஸ்திரேட்டும் ஆட்சேபித்தனர். எனவே சின்ஹா அந்தப் பதத்தை உபயோகப் படுத்தவில்லை யென்று கூறி விட்டார். 16-12-29-ந் தேதியோடு அப்ருவர் சாட்சியம் முடிவுற்றது.

தாங்கள் போலீஸாரால் கொடுமையாக நடத்தப் பட்டதைப் பற்றி 5, 25-11-29-ந் தேதிகளில் கொடுக்கப்பட்ட பிராதுகள் சம்பந்தமாக எவ்வித நடவடிக்கைகளும் எடுத்துக் கொள்ளப் படவில்லை யென்பதாகவும், எனவே இதைக்குறிப்பிட்டு உள்நாட்டு அங்கத்தினருக்குப் பிராது செய்து கொள்ள வேண்டுமென்றும் அன்று கோர்ட்டில் மாஜிஸ்திரேட் முன் எதிரிகள் ஓர் அறிக்கையைக் கொடுத்தனர்கள். எதிரி ராஜகுருவின் கடிதங்கள் போலீஸாரால் தாமதப்பட்டுக் கிடைக்கின்றன வென்று அவர் சார்பாக ஸ்ரீமான் சின்ஹா ஒரு மனு செய்து கொண்டார்.

எதிர் வழக்காடுவதற்குத் தகுந்த ஏற்பாடு செய்வதன் சம்பந்தமாக ஸ்ரீமதி லஜ்ஜாவதியைக் கண்டு பேச அநுமதிக்க வேண்டுமெனத் தாம் பன்முறை கேட்டுக் கொண்டும், அவ்வேண்டுகோள் நிறைவேற்றப் படவில்லை யென்று எதிரி பூதகேஸ தத்தர் லாகூர் ஜில்லா மாஜிஸ்திரேட்டிற்கு ஒரு மனு அனுப்பி யிருக்கிறார்.

### யுவர் தலைவருக்குத் தண்டனை

அமிர்தசரஸில், சென்ற வஜீரன் பாரத மகாநாட்டில் தலைவர் பண்டித பிரேம் பிரகாச தேவதைக் பொதுக்கூட்டத்தில் செய்த இரண்டு பிரசங்கங்களுக்காக 16-12-29-ல் அடிஷனல் ஜில்லா மாஜிஸ்திரேட் இ. பி. கோ. 124எ. பிரிவின்படி அவருக்கு ஒராண்டு கடுங்காவல் தண்டனை விதித்து எதிரியைத் தனி வகுப்புக் கைதியாக நடத்துமாறு உத்திரவிட்டார்.

### தொழிலாளர் சங்கக் காரியதரிசி கைதியானர்

கல்கத்தாவில், தொழிலாளர் விவசாயிகள் கட்சியினரைக் கண்காணித்து வந்த இரகசியப் போலீஸ் காரர்கள் தாக்கப்பட்டதன் சம்பந்தமாக, போலீஸார் 10-12-29ல் வங்காள சணல் தொழிலாளர் சங்கத்தின் காரியதரிசி ஸ்ரீமான் மணி லின்ஹாவைக் கைதுசெய்து அவருடைய வீட்டைச் சோதனையிட்டனர். ஆனால் மணி லின்ஹா அடையாளம் காட்டப் படாததால் விடுதலை யடைந்தார்.

### "ரியாஸத்" ஆசிரியர் வழக்கு

மன்னர் பாதுகாப்புச் சட்டத்தின்படி கைது செய்யப்பட்டு ஹோஷியார்பூரில் விசாரிக்கப்பட விருக்கும் 'ரியாஸத்' ஆசிரியரான ஸர்தார் திவான் சிங் தமது வழக்கை டெல்லிக்கு மாற்றுமாறு கவர்னர் ஜெனராலுக்கு ஒரு மனு கொடுத்திருக்கிறார்.









## "இப்போது"

### ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தி அவர்கள் 'ஓம்மன்' மகாநாட்டில் அருளியது

### ஆன்ம சாதனம்

எனது கருத்தின் நுட்பத்தைத் தெரிந்து கொள்ளப் பிரியப்படுகிறவர்களும், யான் பெற்ற நிலையை அடைய வேண்டுமென்று விரும்பு வோர்களும், தம்மைச் சுற்றி அநித்தியமாயும், முக்கிய மில்லாமலுமிருக்கும் விஷயங்களில் மனம் ஒப்பி அவைகளைச் சரிப்படுத்திக் கொண்டு வாழமாட்டார்கள். அவர்களிடத்தில் அடையவேண்டுமெனப் பாவசமாயிருக்கும் அதிதீவிர ஆவலைக் கொண்டு நான் சொல்லப்போகிற தன்னையாளும் சாதனத்தை (ஆன்ம சாதனத்தை) தாமே மேற் கொள்ள வேண்டும். இதை நன்கு தெரிந்து கொள்வீர்களாக. எப்போதுமே ஒன்றேடொன்றைச் சேர்த்துச் சரிப்படுத்திக் கொண்டுழலும் ஜனங்கள் திரளாயிருந்தென்ன பிரயோஜனம்! நிச்சயமற்று விளக்க மில்லாத வகையில் அச்சத்துடன் சந்தேகப்பட்டுக் கொண்டிருப்போர் (அங்கத்தினர்) எண்ணரிய கூட்டமாயிருப்பதால் என்ன இலாபம்! தம்மைச் சுற்றி முக்கியமில்லாதிருக்கும் ஒவ்வொன்றை அழிக்கும், மெய்ப்பொருளின் சுடராக ஆனவர்கள் மூன்று போகிலும் இருப்பார்களானால், இவர்களும் நானும் புதிய அறிவை, நூதனக் களிப்பை, நவீன உலகை உண்டாக்குவோம். சரிப்படுத்தும் வழக்கத்தை ஒழித்துவிட்டு நிச்சய உறுதியுடனிருக்கும் ஆறு பேரையாவது, மூவரையாவது அல்லது ஒருவரையாவது கண்டுபிடிக்கப் போகிறேன். மற்றவர்கள் அவரவர் சௌகரியத்திற்குத் தக்கபடி அவகாசத்துடன் மெள்ளவரலாம். ஏனென்றால் அவர்கள் கஷ்டப்பட்டுக் கற்கவேண்டியது அதிகம் இருக்கிறது.

### மானிடன் விடுபட்டிருப்பவன்

மானிடன் என்று சொல்லப்பட்டவன் தடையிலாது விடுபட்டிருப்பவன்; எத்தகை முறையாலும், எவ்வித சாஸ்திரப் பிரமாணத்தாலும் எப்படிப்பட்ட தெய்விகக் கடாட்சத்தாலும், வழிபட்டுக் கட்டுண்டிராமல் தனக்குத்தானே உத்தர வாதியாயிருப்பவன். அவன் அந்தரங்கத்தில் விடுபட்டிருப்பதால் அச்சுதந்திரமே அவனுக்குத் தடை ஏற்படுத்தி விட்டது. நீங்கள் விடுபட்டிரா விட்டால் தற்காலத்திலிருக்கும் உலகம் வேறு விதமாயிருக்கும். ஒவ்வொருவரிடத்திலிருக்கும் சித்தம்- -உளம் என்பது தடையிலாதிருந்தபோதிலும் அதற் கொரு வரம்பு ஏற்பட்டிருக்கிறது. ஏனென்றால் "நான்" எனும் தத்துவம் (சீவான்மா) சிறிய குழந்தை; துவக்கத்தில் அதற்கு உறுதியாவது, கருத்தாவது இல்லை. இஷ்டம் போலப்பகுத்தறிவது; விருப்பும் வெறுப்பும் வைத்திருப்பது. ஆகவே தன்மேல் தானே இக்கட்டுகளைச் சுமத்திக் கொண்டது. இவைகளை அதுவே நீக்க வேண்டும்; அப்போதுதான் வாழ்வின் மகிமை வாய்ந்த நிறை வேற்றம் ஏற்படும்; ஆன்ம சுதந்திரம் வரும்.

### சாகா நிலை

தானே சுமத்திக் கொண்ட தடைகளை நீக்க வேண்டும்; தனக்கும் சாசுவதத்திற்கும் இடையில் இனித்தடைகள் யாதும் வாராத நிலைக்கு வரும் வரையில் தடைகளை இடைவிடாது உடைத்துக் கொண்டிருக்க வேண்டும். வரம்பிலாது அளவு கடந்து இருக்கும் அவ்வித நிலையைத்தான் விமோசனம் என்பது; அதாவது ஜீவான்மாவைப் பழுதாகாவண்ணம் செய்து கொள்வது. ஜீவான்மாவை (தான் எனும் தத்துவத்தை) பரிபூரணமாகச் செய்வதே சிரஞ்சீவி நிலை - சாகா நிலை. எங்கெங்கு அறைகுறை இருக்குமோ, எங்கெங்கு நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கின்றதோ அங்கெல்லாம் துக்க மிருக்கின்றது; மேலும் மானிடன் எவனும் அறிந்தோ அறியாமலோ அந்தப்பரிபூரண நிலைக்குப் போய்ச் சேரும் வழியை இடைவிடாது தேடிக்கொண்டிருக்கிறான். அதனால் சொல்ல முடியாத சாந்தத்தையும், சமாதானத்தையும் இளகும் மனதையும் பழுதாகா அன்பையும் நிச்சயமாய்ப் பெறுவோம் என்று நினைக்கிறான். அதையே விடாமுயற்சியுடன் மாந்தர் தேடுகின்றனர். நீங்கள் எல்லோரும் தேடிக் கொண்டிருப்பதும் அதைத்தான். நீங்கள் தனியாயிருந்தாலுஞ்சரி, அல்லது கூடியிருந்தாலுஞ்சரி, துக்கம், நோய் அல்லது பரவச ஆனந்தம், சந்தோஷம் இவைபோன்ற எவ்வகை நிலையிலிருந்தாலுஞ்சரி, அலட்ட முடியாத சமாதானத்தை உங்களுக்குள் நிலை நிறுத்த வேண்டுமென்று முயற்சிக்கின்றீர்கள் அல்லவா? துவந்தங்களால் அசைக்க முடியாத அமைதியில் கண்டிதமாயிருக்கும் சுதந்திரத்தைத் தேடிக் கொண்டிருக்கின்றீர்கள். உங்களைச் சுற்றித் தடைகளை யுண்டாக்குவதும், உங்களைப் பிரித்துத் தனியாயிருக்கச் செய்வதும், பொய்யை மெய்யாகக் காட்டுவதுமாயிருக்கும் ஜீவான்மாவின் கீழ் "நான்" எனும் காமியத்தைத் தூய்மைப்படுத்த வேண்டும்; பழுதாகா வண்ணம் சீர்திருத்த வேண்டும்.

### வாழ்வின் நிறைவேற்றம் யாது?

இவ்வித நிலை பக்தி பரவசத்தால் வருவதல்ல; அல்லது சேவையிலோ, தியானத்திலோ தன்னை மறப்பதிலோ அல்லது குருட்டுத்தனமாய் ஒருவனைப் பின்பற்றுவதிலோ அல்லது ஏதோ ஒரு மூகாந்தரத்தில் தன்னைத் தத்தங் கொடுப்பதிலோ கிடைப்பதல்ல. ஏனெனில் "நான்" எனும் ஜீவான்மா ஏதோ வொன்றை அடையவேண்டுமெனும் போக்கில் போய்க் கொண்டிருக்கையில் அதற்கும் அதனுடைய ஆற்றலுக்கு மிடையில் அதனது ஊக்கத்தாலும், போராட்டத்தாலும், அச்சத்தாலும், இன்னும் கணக்கிலாக் கோளாறுகளாலும், தடைகளை யுண்டாக்கிக் கொண்டே போகிறது. இவ்விதமாய் நிர்ப்பந்தப்படுத்தும் தடைகளை நீக்குவதற்காக இமை கொட்டா விழிப்புடன் எப்போதும் பத்திரமாய், ஆத்ம விசாரணையில் இருக்க வேண்டும். இதை நீங்களே செய்யவேண்டுமே தவிர மற்றவருடைய தூண்டு தலாலல்ல. "நான்" என்பதைப் பாதுகாத்துச் சீர்திருத்தும் படியான அந்தச் சாதனத்தைச் சாதிக்க மேற்கொள்ளுவதற்குமுன், நீங்கள் முதலில் "எல்லாவித வாழ்வின் நிறைவேற்றம்" என்று சொல்லுவதில் சாசுவதமாயுள்ள பிரயோ ஜனத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் அறியாமல் நீங்கள் சாதனம் ஒன்றைச் சாதிப்பீர்களானால் அதாவது எங்கோ போவோம் . என்பதைத் தெரிந்து கொள்ளாமலே சாதிப்பீர்களானால் அந்தச் சாதனமே உமக்கு ஒரு தடையாகி விடும். வாழ்வின் நிறைவேற்றம் என்றாலென்ன, அதனுடைய முடிவுயாது என்பதை நீங்களாகவே யோசனையாலும் விசாரணையாலும், கற்பனை சுமையில்லாத துணிவுடனும், உற்சாகத்துடனும், கண்டு பிடிக்கவேண்டும். ஆன்ம வாழ்வு விமோசனத்தில் நிற்பது; பழுதாகாத ஒற்றுமையிலிருப்பது; இடைவிடாது நிறைவேற்றிக் கொண்டிருப்பது. அது சமுத்திரம்; அதில் எல்லாம் நுழையவேண்டியிருக்கின்றது. அதைத் தெரிந்து கொண்டது மேல் உண்மையான ஆன்ம சாதனம் அந்த அறிவிலிருந்து துவங்குகின்றது.

### சாதனம் தெளிவால் நிகழ்வது

சாதனம் என்று சொல்லுவதால் யான் கொள்ளும் பொருள் யாதெனில் ஏதோ தண்டனைக்குப் பயந்தும், வெகுமதிக்கு ஆசைப் பட்டும், சுமத்திக் கொள்ளுவதல்ல. இவ்வித சாதனத்தைத் தூண்டும் வெகுமதியை யாவது தண்டனையை யாவது நீக்கிவிடும் பட்சத்தில் பழையபடி மதியீன வழிகளுக்குத் திரும்பி விடுவீர்கள். வாஸ்தவத்தில் சாதன மென்பது எவ்வளவோ மேன்மை பெற்றது, எவ்வளவோ தீவிர முள்ளது. எப்படி யெனில் இது தடைகளை யுண்டாக்கும் "நான்" எனும் காமியத்தன்மையின் வேரைக்களைவது. இன்னும் சாதனம் என்பது தன்னுடைய விமோசனத்தைத் தெரிந்து கொண்ட தெளிவில் நிற்பது. இஃது அவரவருக்கிருக்கும் குண விசேஷம், அவரவர் போகும் போக்கைப் பொறுத்ததேதவிர அடைவதைப் பொறுத்ததல்ல. அறிவு என்பது முக்கியமானதைத் தெரிந்து எடுப்பது. அது பரிபூரணத்தின் மேலிருக்கும் அன்பாலும் சாசுவதத்தின் மேலிருக்கும் பக்தியாலும் பிறந்திருக்கவேண்டும்.

ஆன்ம - வாழ்வின் கருத்தைத் தெரிந்து கொள்ளுங்கள்; தெரிந்துகொண்ட அந்தத் தெளிவி லிருந்தே சாதனம் தானே ஏற்பட்டு வரும். நான் ஏதோ உங்களுக்காக வெகுமதி கொடுப்பதாகவும், தண்டனை விதிப்பதாகவும் நினைத்துக் கொண்டாவது, அல்லது மோட்சம், நரகம் இருக்கிறதென்றாவது, அல்லது சிறப்பானது என்று மதிக்கும் ஏதோ ஒன்றுடன் ஒத்துழைக்க வேண்டுமென்றாவது, நீங்கள் சாதனத்தைச் சாதிக்காதீர்கள். இவைக ளெல்லாம் குழந்தை வியாபாரங்கள். அறிந்து கொள்ளாமலே வெறுமையில் சாதிப்பீர்களானால் பெருத்த தடைகளையும் தவறான கருத்துகளையும் திக்கங்களையும் உங்களுக்கே உண்டாக்கிக் கொள்வீர்கள்; மற்றவர்களுக்கும் உண்டாக்குவீர்கள்.

### அகண்டாகார வாழ்வு

வாழ்வென்பது அகண்டாகாரமாயும், அளவிலாமலும் பூரணமாயும் எல்லையில்லாமலும் தடைபடாமலும் இருப்பது. அதில் மானிட வர்க்கத்திற்கு இருக்கும் வாழ்க்கை எல்லாம் சேர்ந்திருக்கும். அந்த வாழ்வின் மேலிருக்கும் அன்பால் சாதனம் உதிக்க வேண்டும். சந்ததமா யிருப்பதன் மேல் நீங்கள் அன்பு கொண்டிருப்பதால் அத்

தகைய அன்பைத் தட்டிக்கொடுத்து அதற்கு ஊட்டந்தந்து அதை ஆதரித்து வந்தால் அது மாசறு நிலைக்குக் கொண்டுபோய் விடும். அதீதமாயும், மெய்ப்பொருளாயும், பரிபூரண மாயும், மாசிலா விதமாயும், சமாதான நிறை வாயு மிருக்கும் அந்த விமோசனத்தின்மேல் நீங்கள் அன்பு கொண்டிருக்க வேண்டும். அந்த அன்பின் ஆற்றலாலே மேற்கொண்ட சாதனம் உங்களை மாசறு விதமாக்கிவிடும். ஆகையால் அந்த அன்பை ஆதரிக்க வேண்டும். மாசிலாவிதம் தன்னை ஆக்கிக் கொள்வதே வாழ்வின் பரிபூரணம். கரைகடந்து அகண்ட விரிவாயிருக்கும் வாழ்வில் ஆறுகள் கடலில் கலப்பதுபோல் எல்லா விஷயங்களும் நுழைகின்றன.

உண்மையான சாதனம் என்பது அடக்குவதல்ல; மற்று அது தெரிந்து கொண்ட தெளிவால் நிகழ்வது. நீங்கள் விமோசனத்தைக் கோரியதால், அதை உமது ஆசை தூண்டிக்கொண் டிருப்பதால் நீங்கள் எதையும் அடக்க முடியாது. சாதனம் என்பது சுத்தமாய் அவரவருடைய தெரிந்த தெளிவால் வரும் முயற்சி.

சரியான சாதனம் என்பது அறிந்த தெளிவில் நிற்பது. அந்த ஜீவான்மாவின் தன்மையை முற்றும் மாற்றிவைப்பது இது. நல்வகைத் திரிபை வுண்டாக்குவது தானுக ஏற்படுத்திக் கொண்ட சாதனத்தால் வரும் அறிவு—விளக்கம்—ஒருபோதும் அவிந்து போகாது. தளைக ளிடையே இருந்து கொண்டு விடுபட்டிருக்க எப்போதும் தேடுவதும், அழுக்கொடு இருந்துகொண்டே அழுக்குறுத் தன்மையை எல்லா வேளையிலும் ஆராய்வதும், அறை குறையிலிருந்து கொண்டே பரிபூரணத்தைச் சதா நோக்குவதும், சஞ்சலத்திலிருந்து கொண்டே சமாதானத்தைக் கோரி சதா கவலை கொள்வது மான அந்த ஜீவான்மா, தேடுவதைப் பெற்ற பிறகு, எவ்வித சாதனமும் அதற்கு வேண்டுவதில்லை. ஏனென்றாலோ சாதனம் என்று சொல்லும் போதே அதில் போராட்டம், விழிப்பு, ஆயாசம், கஷ்டம், வருத்தம், இவைகள் சதாவுண்டு. ஆகவே இதற்கு அப்பாலிருக்க வேண்டுமானால் நீங்கள் அதைச் சாதித்துத் தேறினவர்களாயிருக்க வேண்டும்.

மானிடன் தானே தன்னைப் பழுதாக்கா நிலைக்கு வரும்வரையில், அவன் சுகத்தை அறியமாட்டான். சிநேகித பந்தத்தாலும் தனியனாய் விடுவேனெனும் பயத்தாலும், பிடிபட்டிருப்பான். கஷ்டத்தின் ஆயாசம் அவனை இன்னும் பீடிக்கும். ஆகவே சமாதானம் பெற்ற அமைதி நிலையில் பெரியவராக வருபவரை உண்டாக்க வேண்டும். அவ்வித மனிதர்கள் உங்களிடையில் பிறக்கவேண்டும். அப்படிப் பட்டவர்கள் புதிய மாறுதலை யுண்டாக்குவார்கள்; அநித்திய மெனும் மட்டப் பொடிகளை எரிக்கும் சுடராகி இருப்பார்கள்; அமுக்கியமாயும் பிள்ளை விளையாட்டாயுமிருக்கும் விஷயங்களை சஞ்சரிக்கும் சண்டமாருத ஆற்றலை உண்டாக்குவார்கள்.

## நித்தியத்துவம்

அவ்வித மக்தர்களாக நீங்கள் ஆகவேண்டுமானால் சந்ததமாயிருக்கும் "இப்போது" என்பதில் அதாவது எதிர்காலமாகவோ இறந்த காலமாகவோ இல்லாத காலாதீதமா யிருக்கும் நித்தியத்துவத்தில் நீங்கள் வாழவேண்டும் அதை அறிந்த தெளிவு, அதாவது ஜீவான்மாவைச் சுற்றியிருக்கும் அநித்தியமாயும் உபயோகமற்ற விஷயங்களை அழிக்கும் அந்த அபரிமித வன்மை, உங்களில் குடிகொண்டிருக்க வேண்டும். அப்படிப் பட்டவர்களானால் உங்களுடைய வாழ்க்கையால் புதிய உலகையும், புதிய அறிவையும் உண்டாக்குவீர்கள். உங்களுடைய வாழ்க்கை தான், அதாவது நீங்கள் செய்வது, எண்ணுவது தான் முக்கியமானது. நீங்கள் வாழ்வின் விளக்கத்தை ஆபாசத்தால் எவ்விதமாய் மறைக்கின்றீர்கள் என்று பிரசங்கம் செய்வதல்ல.

இவை எல்லாம் மட்டில்லாததாகவும், விளங்காததாகவும், நிச்சயமில்லாததாகவும் கிடைக்க முடியாததாகவும் தோன்றும்; என்றாலும் பலவீனமா யிருந்தாலுஞ் சரி, தட்டுத்தடுமாறிக் குழப்பமுற்று திக்கில்லையே எனும் தன்மையுடன் சிக்குகளால் நிறைந்திருந்த போதிலுஞ் சரி அதைப் பின்பற்றவே வேண்டும். இச் சிக்குகளெல்லாம் சந்ததத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கில் சிறு விஷயங்களே. தெரிந்த தெளிவால் ஒரு சிறு அடி எடுத்து வைத்தாலுமே அது பெருத்த பரவச ஆனந்தமா யிருக்கும். 'மலைச்சிகரத்தில், மெத்த தெளிவான அறிவில், அதிதீவிர ஊக்கத்தில், உங்களைக் கொண்டுபோய் விடும். நீங்கள் எதிர்காலத்திலும், இறந்த காலத்திலும் வாழாமல் அந்தச் சந்ததத்தின் க்ஷணமாத்திரமாயிருக்கும் "இப்போது" என்பதில் முற்றும் குறியோடு வாழும்போது தான் அந்தத் தெளிவுடன் முதற் காலடி எடுத்து வைக்க முடியும்.

நீங்கள் எல்லோரும் இவ்விடம் ஏன் வந்து சேர்ந்திருக்கின்றீர்கள்? நீங்கள் ஏன் ஒன்றாய்க் கூடி வந்திருக்கிறீர்கள்? நீங்கள் உண்மையில் எதைத் தேடுகின்றீர்கள்? நீங்கள் வாஸ்தவத்தில் கண்டிதமாய் யாதொரு நிச்சயமு மில்லாதிருக்கின்றீர்கள். என்னவேண்டுமென்று உங்களுக்குத் தெரியவில்லையே!

வாழ்விற்கு வேண்டிய நிச்சயத்தையும், அமைதியைக் கொடுக்கும் கருத்தையும், அக் கருத்திலிருந்து வரும் பரவசத்தையும், அதிலிருந்து உண்மையாய் எழும் சிருஷ்டிக்கும் வன்மையையும், இவைகளைக் கொடுக்கும் ஏதோ வொன்றைக் கண்டுபிடிக்கலாமென்று வந்திருக்கிறீர்கள். வேறு விதமாகச் சொன்னால் நீங்கள் மெய்ப்பொருளைத் தேட வந்திருக்கிறீர்கள். இந்த வனத்தினிடையிலிருக்கும் ஏரிகளுக்கு வரும் காட்டுப் பறவைகளைப் போலவே நீங்களும் நிச்சயமில்லாது பயந்து கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்கு ஒருமன நிலை நாட்ட மென்பதில்லை. எவரும் உங்கள் மனதைச் சுலபமாய்க் கலக்கிவிடக் கூடும். முந்தியே நிச்சய மனவுறுதி கொண்டவர்கள் வேறு. அவர்கள் தனியே இருக்கிறார்கள். ஆனால் அத்தகையர் உலகில் சிலரே.

தி. மூ. மா.

(தொடரும்)

---

## கதர் அபிவிருத்தி

---

### அந்நியத்துணி பகிஷ்காரக் கமிட்டிவேலை

ஓர் ஆண்டுக்கு முன்னர் பம்பாய் மாநகரில், கதர்விற்பனைசெய்யும் ஒருசங்கம் ஜில்லா காங்கிரஸ்கமிட்டி அங்கத்தினர்களால் நிறுவப்பட்டுள்ளது. இதில்இதுவரை ரூ.4600க்கு கதர் விற்பனை ஆகியிருக்கிறது. கதர் விற்பனைக்காக வெளியே செல்லும் போது தொண்டர்கள் ஆறு முறை அந்நியத்துணிகளைத் திரட்டித் தீக்கிரையாக்கியிருக்கிறார்கள். மகாத்மாகாந்தியின் 60-ம் ஆண்டு நிறைவு விழாக் கொண்டாட்டம் நடைபெற்றவாரத்தில் பம்பாய்ராஷ்டிரசாலை தக்ளிமண்டலத்திலிருந்து, கையெழுத்துப் பிரதியாக வெளிவரும் "காதிசேவக்" என்னும் மாதசஞ்சிகையின் அநுபந்தம் ஒன்று கிடைத்தது. கதர் சம்பந்தமான பல அரிய வியாசங்கள் இதில் அடங்கி யிருக்கின்றன. பம்பாய் புகலேஸ்வரர் காங்கிரஸ் கமிட்டி, இவ்வாண்டு முழுவதும், காங்கிரஸுக்கு அங்கத்தினர்களைச்சேர்ப்பதிலும், கதர் விற்பனை செய்வதிலும் மிகுந்த ஊக்கத்தைக் காட்டியிருக்கிறது. ஞாயிறுதோறும் அந்நியத்துணி பகிஷ்கார ஊர்வலங்கள் நடைபெற்று வந்தன. அந்நியத்துணி பகிஷ்காரத்தை வலியுறுத்தித் துண்டுப் பிரசுரங்கள் பல வழங்கப் பட்டனத் தமிழ்நாட்டில் திண்டுக்கல்லில், சென்ற நவம்பர் 2-ந் தேதிவரை மூன்று வாரங்களில் இரண்டு கடைகளின் மூலமாகரூ2062-13-0க்குக் கதர் விற்பனை செய்யப்பட்டிருக்கிறது. அகில இந்திய நூல் நூற்போரின் சங்கக் கிளை ஒன்று திறக்கப்பட்டுள்ளது. அந்நியத்துணி பகிஷ்கார சம்பந்தமான சுவரொட்டி விளம்பரங்கள் தயாரிக்கப் பட்டிருக்கின்றன. சாம்பாரனில் அந்நியத்துணி கட்டுவதில்லையென 14,115பேர் வாக்குறுதி செய்துள்ளார்கள். பீஹாரிலுள்ள பகல்பூரில் அகில இந்திய நூல் நூற்போர் சங்கத்தின் பீஹார் கிளையில் 28-11-29 வரை ரூ 22,507க்குக் கதர் விற்பனையாகியிருக்கிறது. இதல்லாமல், பண்டிதர் போதநாராயணமிஸ்ரா அவர்கள், தம்சொந்தச்செல்வாக்கில் ரூ.4000க்குக் கதர் விற்பனை செய்துள்ளார். இங்குஅந்நியத்துணி கட்டுவதில்லை யென உறுதி மொழி தந்திருப்பவரின் தொகை 3,987 ஆகும். சித்தாபூரில் (வடகன்னடம்) ஒரு கதர்கடை ஸ்தாபிக்கப் பட்டுள்ளது. தொண்டர்கள் கதர் விற்பனைக்காக 800 வீடுகளுக்கு விஜயம் செய்தார்கள். இரண்டு பொதுக் கூட்டங்களும, ஓர் ஊர்வலமும் நடைபெற்றன. தம்ஸார் நகரசபையார், நகரசபைக் கட்டிடத்தின் மீது தேசியக் கொடியை நாட்டுவதெனத் தீர்மானஞ் செய்திருக்கின்றனர். பந்தர், தம்ஸார், சிஹோரா இவ்விடங்களில் அந்நியத்துணிகள் தீயிலிட்டுக் கொளுத்தப் பட்டன என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.

---

## கணித சோதிடம்

பாகித கணிதப்படி கணிதஞ் செய்து பலன்கள் கூறப்படும். ஒரு வருஷத்திற்கு மாதவாரி பலன்கள் நுட்பமாயும் விவரமாயும் எழுதி அனுப்ப ரூபாய் இரண்டு. ஆருடம் 5 கேள்விகளுக்கு விவரமான பதில் எழுதி அனுப்ப ரூபாய் ஒன்று. விவாக விஷயம் ரூபாய் ஒன்று. விவாக விஷயத்தைப் பற்றி நாங்கள் எழுதி அனுப்புவதைக் கொண்டு பெண்ணுக்குப் புருஷனும் புருஷனுக்குப் பெண்ணும் இன்னாரென்று வெகு சுலபமாய் நிச்சயிக்கலாம். எங்களிடம் அருமையான பூர்வீக ஜோதிடநூற்கள் பலவுள்ளதால், நாங்கள் எழுதி அனுப்பும் பலன்கள் பொதுப் பலன்களா யிராமல் விவரமாகவும் சாஸ்திரீகமாகவு மிருக்கும். உங்கள் ஜாதககலாவதுகடிதம் எழுதும் நேரத்தையாவது தெரிவியுங்கள்.

தே. ஆறுமுக செட்டி,
முதலியார் பேட்டை, புதுச்சேரி.

